# இராசராசன்

## துணுக்குகள் நூறு

ஆசிரியர்கள்

சொ. சந்திரவாணன்

நாக. கணேசன்

இரா. சிவானந்தம்





பதிப்பாசிரியர்

முனைவர் தி.ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப,

முதன்மைச் செயலாளர்(ம)ஆணையர்

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை,

சென்னை - 600 008

2010 - திருவள்ளுவர் ஆண்டு 2041

தஞ்சைப் பெருவுடையார் கோயில்
ஆயிரம் ஆண்டு நிறைவு விழா - சிறப்பு வெளியீடு

# இராசராசன்

## துணுக்குகள் நூறு





ஆசிரியர்கள்

**சொ. சந்திரவாணன்**

**நாக. கணேசன்**

**இரா. சிவானந்தம்**

பதிப்பாசிரியர்

முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**, இஆப,

முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்



வெளியீடு

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

சென்னை - 600 008

2010 - திருவள்ளுவர் ஆண்டு 2041

முதல் பதிப்பு - 2010 / திருவள்ளுவர் ஆண்டு 2041
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
வெளியீடு எண். 225
5000 பிரதிகள்



இராசராசன் துணுக்குகள் நூறு

ஆசிரியர்கள்
சொ. சந்திரவாணன்
நாக. கணேசன்
இரா. சிவானந்தம்

பதிப்பாசிரியர்
முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இஆப,

**விலை ரூ. 12.00**

அச்சிட்டோர்
ஜெய்கணேஷ் அச்சகம்,
19, வெங்கடசாமி சந்து, சாந்தோம்
சென்னை - 600 004

6-4

# பதிப்புரை

மக்கள் வாழ்வியலை உணர்த்தும் வரலாற்று ஆவணம் கல்வெட்டுகள். அவை மலைகளிலும், பாறைகளிலும், கோயில்களிலும், தனிக் கல்லிலும் அந்தந்த பகுதிகளில் பயன்பாட்டிலிருந்த எழுத்து வடிவில் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றை கண்டறிந்து படியெடுத்து நூலாக்கும் பணியினை தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை தொடர்ந்து சிறப்பாக நிறைவேற்றி வருகின்றது. பிற்கால சோழ மன்னர்களில் தலைச்சிறந்து விளங்கிய முதலாம் இராசராசன் தஞ்சையில் எடுப்பித்த தஞ்சைப்பெருவுடையார் கோயிலின் 1000-மாவது ஆண்டு நிறைவு விழாவை முன்னிட்டு சோழராட்சியில் நிகழ்ந்த சிறப்புமிக்க நிகழ்வுகள் தொகுக்கப்பட்டு **"இராசராசன் துணுக்குகள்- நூறு"** என்னும் பெயரில் வெளிவரும் இந்நூல் சிறந்த படைப்பாகும்.

"தஞ்சாவூர் கூற்றத்து தஞ்சாவூர் நாம் எடுப்பித்த திருக்கற்றளி ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார்" என்று கல்வெட்டு காட்டும் முதலாம் இராசராசன் கட்டிய தஞ்சை பெருவுடையார் கோயிலுக்கு 'நாம் கொடுத்தனவும், அக்கன் கொடுத்தனவும், நம் பெண்டுகள் கொடுத்தனவும் கொடுத்தார் கொடுத்தனவும்" என்று அனைவரின் பங்களிப்போடு கோயில் எடுக்கப்பட்ட அரிய செய்தியும் சோழர்கள் கட்டிய கோயில்கள், கொடுத்த கொடைகள், நிர்வாக செயல்பாடுகள், வேளாண்மை, மருத்துவம் போன்றவற்றின் வளர்ச்சிகள், தமிழும் கலையும் வளர்ந்தபாங்கு ஆகிய அனைத்து விவரங்களையும் தொகுத்து திரு. சொ. சந்திரவாணன், காப்பாட்சியர், மதுரை

திரு. கணேசன், காப்பாட்சியர், கரூர், திரு. இரா. சிவானந்தம், கல்வெட்டாய்வாளர், சென்னை ஆகியோர் இந்நூலில் வழங்கியுள்ள விதம் பாராட்டுக்குரியது.

தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம் (மதுரை) அலுவலர்கள் வெளியிட்ட **"இராசராசன் சிறப்பு மலர் துணுக்குகள்-70"** என்ற நூலின் செய்திகளுடன் கூடுதல் விவரங்கள் இந்நூலில் புதிய வடிவில் வழங்கப்பட்டுள்ளன. இந்நூலின் பதிப்புப் பணியினை மேற்கொண்ட திரு. கி. சு. சம்பத், கல்வெட்டாய்வாளர், சென்னை, திரு. இரா. சிவானந்தம், கல்வெட்டாய்வாளர். சென்னை ஆகியோருக்கும். கணினி தட்டச்சு மற்றும் முகப்பு அட்டை வடிவமைப்பு, அச்சுப்பிழைத்திருத்தம் மேற்கொண்ட திருமதி. தே. சத்தியவதி, திருமதி. கோ. செம்மலர் ஆகியோருக்கும் பாராட்டுகள். மற்றும் இந்நூலை வெளியிட உரிய நிதியினை அளித்திட்ட தமிழ்நாடு அரசிற்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வரலாற்றுக்குப் புதிய வ்ரவாக கிடைத்துள்ள இந்நூல் சோழர் ஆட்சியில் நிகழ்ந்த முக்கிய வரலாற்று நிகழ்வுகளின் தொகுப்பாக திகழ்கின்றது. ஆய்வாளர்களும், ஆசிரியர்களும், மாணவர்களும், பொது மக்களும் சோழர் கால வரலாற்று ஆவணமாக திகழும் இந்நூலினை பெற்று பயனடைய கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை-8 **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**
21-8--2010 முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

# இராசராசன்
## துணுக்குகள் நூறு

### 1. சங்க காலச் சோழர்

கி.மு. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2-ஆம் நூற்றாண்டு முடிய காவிரிநதி பாயும் சோழ நாட்டை ஆண்டனர். காவிரிப்பூம்பட்டினம், உறையூர் ஆகியவை இவர்களது தலைநகரங்களாகும். கரிகால் பெருவளத்தான், நெடுங்கிள்ளி, கோச்செங்கண்ணான் போன்ற பல சிறந்த மன்னர்கள் இருந்தனர். காடுகள் வெட்டப்பட்டு நாடுகள் உண்டாக்கப்பட்டன. காவிரியின் இருகரைகள் உயர்த்திக் கட்டப்பட்டன. யானைகள் கட்டிப் போரடிக்கும் அளவுக்கு நெல் விளைச்சல் இருந்தது. இமயத்திலும் புலிக்கொடி பறந்தது. உறையூரை ஒட்டிய காவிரி ஆற்றங்கரைப் பகுதிகளில் இன்றும் சங்க காலத்துப் பானை ஓடுகள், எழுத்துள்ள பானை ஓடுகள், வெளிநாட்டோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்தற்கு சான்றாக ரோமானியரது பானை ஓடுகள் கிடைக்கின்றன.

### 2. சோழப் பேரரசு

கி.பி. 9-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு முடிய தமிழகத்தை ஆட்சி செய்த அரசு சோழப் பேரரசு எனப்படும். இவ்வரசின் தலைநகரங்கள் தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம் ஆகியவை. உறையூர், கும்பகோணத்தை அடுத்த பழையாறை ஆகியவை அரச குடும்பத்தினர் வாழ்ந்த நகரங்களாகும்.

## 3. சோழர் குடிவழி

விஜயாலயன்(சுமார் கி.பி. 850-871)
ஆதித்தன் (871-907)
பராந்தகன் (907-954)
இராசாதித்தன் (949ல் இறந்தான்)
கண்டராதித்தன் (950-957)
உத்தமசோழன் (971-987)
அறிஞ்சயன் (954-960)
சுந்தரசோழன் (957-975)
ஆதித்தகரிகாலன் (960-965)
முதலாம் இராசராசன் (985-1014)
முதலாம் இராசேந்திரன் (1014-1043)
முதலாம் இராசாதிராசன் (1018-1054)
இரண்டாம் இராசேந்திரன் (1052-1064)
இராசமகேந்திரன் (1058-1063)
வீரஇராசேந்திரன் (1063-1070)
அதிராசேந்திரன் (1068-1071)
வெங்கிராசராச நரேந்திரன் - அம்மங்கை
முதலாம் குலோத்துங்கன் (1070-1122)
விக்கிரமசோழன் (1118-1135)
இரண்டாம் குலோத்துங்கன் (1133-1150)
இரண்டாம் இராசராசன் (1146-1172)
இரண்டாம் இராசாதிராசன் (1166-1181)
மூன்றாம் குலோத்துங்கன் (1178-1218)
மூன்றாம் இராசராசன் (1216-1260)
மூன்றாம் இராசேந்திரன் (1244-1279)

## 4. கல்வெட்டுகளில் சோழர்களைக் கண்டுபிடிக்கும் வழி

சோழ மன்னர்கள் இராஜகேசரி, பரகேசரி என்ற பட்டங்களைத் தங்கள் பெயர்களுடன் இணைத்துக் கொள்வார்கள். பல கல்வெட்டுகளில் இப்பட்டங்கள் காணப்பட்டாலும் மன்னர்களின் பெயர்கள் வருவது குறைவே. எனவே எந்த மன்னனுடைய கல்வெட்டு என்று கண்டுபிடிப்பது சிரமம். இதோ உங்களுக்கு மட்டும் அந்த இரகசியம்.

| | |
|---|---|
| தஞ்சைக்கொண்ட பரகேசரி | - விஜயாலயன் |
| தொண்டைநாடு பரவிய ராசகேசரி | - ஆதித்தன் |
| மதிரைக் கொண்ட பரகேசரி,<br>மதிரையும் ஈழமும் கொண்ட பரகேசரி | - பராந்தகன் |
| ஆனைமேல் துஞ்சிய தேவர் | - இராசாதித்தன் |
| சோழப் பெருமானடிகள் நம்பிராட்டியார் உத்தம சோழ தேவரை திருவயிருவாய்த்த பிராட்டியார் | கண்டராதித்தன் மனைவி<br>- செம்பியன்மாதேவி |
| ஆற்றூர் துஞ்சின தேவர் | - அறிஞ்சயன் |
| பொன்மாளிகைத் துஞ்சினதேவர் | - சுந்தரசோழன் |
| வீரபாண்டியன் முடித்தலை<br>கொண்ட கோப்பரகேசரி | - ஆதித்த கரிகாலன் |
| கோவி ராசராசகேசரி,<br>காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளிய<br>கோவிராசராசகேசரி | - முதலாம் இராசராசன் |
| பூர்வதேசமும்<br>கங்கையும் கடாரமும் கொண்ட<br>கோப்பரகேசரி | - முதலாம்<br>இராசேந்திரன் |
| ஆனை மேல் துஞ்சின தேவர் | - இராசாதிராசன் |
| (வீர) இராசேந்திர சோழ தேவர் | |
| சுங்கம் தவிர்த்த சோழ தேவர் | - குலோத்துங்கன்-I |

| | |
|---|---|
| அனபாயச் சோழன் | - இரண்டாம் குலோத்துங்கன் |
| திரிபுவன வீரதேவர், பூர்வதேசமும் கங்கையும் கொண்ட கோப்பரகேசரி, மதுரையும் ஈழமும் கருவூரும் கொண்ட கோப்பரகேசரி, பாண்டியன் முடித்தலையும் கருவூரும் ஈழமும் கொண்ட, கோப்பரகேசரி | - மூன்றாம் குலோத்துங்கன் |

## 5. சோழர் மெய்க்கீர்த்திகளின் தொடக்கம்

| | |
|---|---|
| 'திருமகள் போல' | .... முதலாம் இராசராசன் |
| 'திருமன்னி வளர' | .... முதலாம் இராசேந்திரன் |
| 'திங்களேர் தருதன் தொங்கல்' | .... இராசாதிராசன் |
| 'திங்களேர் பெற வளர்' | .... இராசாதிராசன் |
| 'திருக்கொடியொடு தியாகக்கொடி | .... இராசாதிராசன் |
| 'திருமாது புவியெனும்' | .... இரண்டாம் இராசேந்திரன் |
| 'திருமகள் மருவிய செங்கோல்' | .... இரண்டாம் இராசேந்திரன் |
| 'திருவளர் திரள்புயத் திருநிலவளந்' | .... வீரராசேந்திரன் |
| 'வீரமே துணையாக' | .... வீரராசேந்திரன் |
| 'திங்களேர் மலர்ந்து வெண்குடை' | .... அதிராசேந்திரன் |
| 'திருமன்னி விளங்கு' | .... முதலாம் குலோத்துங்கன் |
| 'புகழ் மாது விளங்க' | .... முதலாம் குலோத்துங்கன் |
| 'புகழ்சூழ்ந்த புணரி' | .... முதலாம் குலோத்துங்கன் |
| 'பூமேலரிவையும் பொற்செயப் பாவையும்' | .... முதலாம் குலோத்துங்கன் |
| 'பூமாது புணர' | .... விக்கிரமசோழன் |
| 'பூமாலை மிடைந்து' | .... விக்கிரமசோழன் |
| 'பூமன்னு பதுமம்' | .... இரண்டாம் குலோத்துங்கன் |
| 'பூமருவிய புவியேழும்' | .... இரண்டாம் குலோத்துங்கன் |

| | |
|---|---|
| 'பூமேவி வளர்' | .... இரண்டாம் குலோத்துங்கன் |
| 'பூமேவு திருமகள்' | .... இரண்டாம் குலோத்துங்கன் |
| 'பூமன்னு பாவை' | .... இரண்டாம் குலோத்துங்கன் |
| 'பூமன்னு பாவை' | .... இரண்டாம் குலோத்துங்கன் |
| 'பூமன்னு பூத்த' | .... இரண்டாம் குலோத்துங்கன் |
| 'பூமருவிய பொழிலேழும்' | .... இரண்டாம் இராசராசன் |
| 'பூமருவிய திருமாதும்' | .... இரண்டாம் இராசராசன் |
| 'கடல் சூழ்ந்த பார்மாதரும்' | .... இரண்டாம் இராசாதிராசன் |
| 'கடல் சூழ்ந்த பாரேழுங்' | .... இரண்டாம் இராசாதிராசன் |
| 'புயல் பெருக வளம் பெருக' | .... மூன்றாம் குலோத்துங்கன் |
| 'புயல் வாய்த்து' | .... மூன்றாம் குலோத்துங்கன் |
| 'சீர்மன்னி இருநான்கு திசைவிளக்கு | .... மூன்றாம் இராசராசன் |
| 'சீர்மன்னு மலர் மகளும்' | .... மூன்றாம் இராசராசன் |
| 'பூமியும் திருவும்' | .... மூன்றாம் இராசேந்திரன் |
| 'பூமருவிய திருமடந்தை' | .... மூன்றாம் இராசேந்திரன் |

## 6. கொங்குச் சோழர்

ஆதித்த சோழன் கொங்கு நாட்டைக் கைப்பற்றிய பின் (கி.பி. 894) சோழப் பேரரசின் கீழ் அந்நாட்டை ஆளப் பிரதிநிதிகளை அமர்த்தினான். அவர்கள் நாளடைவில் தனிவம்சத்தினராயினர். அவர்கள் கொங்குச் சோழர்கள் எனப்படுவர். சோழர்களைப் போலவே பெயர்களையும் இராசகேசரி-பரகேசரி பட்டங்களையும் புனைந்து கொண்டனர். தங்களின் தனி ஆட்சியாண்டுகளைக் குறிப்பிட்டுக் கல்வெட்டுகளைப் பொறித்தனர். இவர்களது குடிவழி இராசராசசோழன் காலம் முதற்கொண்டு கிடைக்கிறது.

## 7. கொங்குச் சோழ மன்னர்கள்

முதலாம் விக்கிரம சோழன் .... (1004-1045)

| | | |
|---|---|---|
| அபிமான சோழ ராசாதிராசன் | .... | (1080-1110) |
| இராசாதிராச உத்தமன் | .... | (1110-1117) |
| இராசாதிராச வீரசோழன் | .... | (1117-1135) |
| உத்தமசோழவீர நாராயணன் | .... | (1135-1149) |
| குலோத்துங்கன் | .... | (1148-1183) |
| பரகேசரி வீரசோழன் | .... | (1183-1206) |
| இராசகேசரி வீரராசேந்திரன் | .... | (1207-1255) |
| இரண்டாம் பரகேசரி விக்கிரமன் | .... | (1255-1263) |
| இராசகேசரி | .... | (1263-1273) |
| மூன்றாம் பரகேசரி விக்கிரமன் | .... | (1273-1303) |

### 8. தெலுங்குச் சோழர்

களப்பிரர் போன்றோர் தாக்குதல் காரணமாகச் சங்க காலத்தை அடுத்துத் தமிழகத்தில் சோழராட்சி நிலைக்கவில்லை. ஆனால் சோழர்கள் ஆந்திரம், கர்நாடகப் பகுதிகளுக்குச் சென்று அங்கு ஆட்சிபுரியத் தொடங்கினர். அப்படி ஆந்திரப்பகுதிக்குச் சென்று ஆட்சி புரிந்த சோழர்கள் தெலுங்குச் சோழர்கள் எனப்படுவர். கி.பி.8-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.13-ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்த அவர்கள் பொத்தப்பிச் சோழர், வெலநாட்டுச் சோழர், நெல்லூர்ச் சோழர் என்று பல வழியினராக விளங்கினர். ஸ்ரீகண்டன் என்ற தெலுங்குச் சோழன் தனது மகளைப் பாண்டியன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபனுக்கு மணம் முடித்திருந்தான். கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் காஞ்சி, சென்னை, திருவண்ணாமலை, வேலூர் பகுதிகளில் விஜயகண்டகோபாலன் போன்ற மன்னர்களது கல்வெட்டுகள் தமிழில் கிடைக்கின்றன.

### 9. சோழ பாண்டியர்கள்

பாண்டிய நாட்டைச் சோழர்ஆட்சியின் கீழ் முதன் முதலாகப் பராந்தக சோழன் கொண்டுவந்தான். இராசராசசோழன்

காலம் வரை. பாண்டியநாடு முழுமையாக சோழரின் ஆட்சிக்குட்படுத்தப்படவில்லை. பாண்டியர்கள் அவ்வப்போது போர் தொடுத்துக் கொண்டே இருந்தனர். இதனைத் தவிர்க்க முதலாம் இராசேந்திரன் தனது இரண்டாவது மகனைப் பாண்டிய நாட்டின் அரசனாக்கினான். பாண்டிய நாட்டு மக்கள் மனம் கோணாதிருக்க பாண்டியர்களது பட்டமான ஜடாவர்மன் என்ற பட்டத்தைக் கொடுத்து, சோழ பாண்டியன் என்ற பெயரை கொடுத்தான். இது ஒரு ராஜதந்திரம், இவனை அடுத்து அடுத்து சோழ இளவரசர்கள் பாண்டிய நாட்டில் அரசு புரிந்தனர்.

1. ஜடாவர்மன் சுந்தர சோழ பாண்டியன் - (1021-1052) பின்னாளில் இவனே சோழப் பேரரசன் இரண்டாம் இராசேந்திரனாக விளங்கினான்.(1052-64).

2. மாறவர்மன் பராக்கிரம சோழ பாண்டியன் - (1052-54) இவனே சோழப் பேரரசன் இராசமகேந்திரன். (1058-1063).

3. ஜடாவர்மன் சோழப் பாண்டியன் - (1063-1068). இவனே சோழப் பேரரசன் அதிராசேந்திரன் (1068-71).

4. விக்கிரம சோழப் பாண்டியன் - (1070-1080). இவன் முதல் இராசேந்திர சோழனின் சகோதரன் மகன்.

## 10. சோழ நாட்டில் நிகழ்ந்த அகழாய்வுகள்

தஞ்சை மாவட்டத்தில் காவேரிப்பூம்பட்டினம், பழையாறை. வல்லம், தஞ்சைக் குறும்பன்மேடு ஆகிய இடங்களிலும், திருச்சி மாவட்டத்தில் உறையூர், அழகரை, அரியலூர் மாவட்டத்தில் கங்கைகொண்ட சோழபுரம், கரூர் மாவட்டத்தல் திருக்காம்புலியூர். ஆகிய சோழர் காலப் பகுதிகளில் அகழாய்வு செய்யப்பட்டுள்ளன. சங்ககாலச் சோழரது எழுத்துப் பொறித்த பானை ஓடுகள், ரோமானியப் பானை ஓடுகள், மணிகள், கட்டிடப் பகுதிகள், பிற்காலச் சோழர்களது மாளிகைப் பகுதிகள், சீனம் முதலிய நாடுகளுடன்

இருந்த தொடர்பினை வெளிப்படுத்தும் பானை ஓடுகள், ஆயுதங்கள், சிற்பங்கள், அணிகள் முதலியவை கிடைத்ததோடு நிறைய வரலாற்றுச் செய்திகளும் வெளியாகியுள்ளன.

## 11. முதலாம் இராசராசன்

| | | |
|---|---|---|
| தாய் | : | வானவன்மாதேவி |
| தந்தை | : | சுந்தரசோழன் |
| பிறந்த நாள் | : | ஐப்பசி சதயம் |
| முடிபுனை நாள் | : | 25-6-985 |
| ஆண்ட காலம் | : | கி.பி.985 - கி.பி.1014 |
| பட்டத்தரசி | : | தந்திசக்திவிடங்கியான் ஒலோகமாதேவி |
| மக்கள் | : | முதலாம் இராசேந்திரன் |
| | | ஆளவந்தான் |
| | | மாதேவடிகள் |
| | | அருமொழி சந்திரவல்லியாகிய கங்கமாதேவி |
| | | குந்தவை |
| சகோதரி | : | குந்தவைப் பிராட்டியார் |
| சகோதரன் | : | ஆதித்த கரிகாலன் |

## 12. இராசராசனின் விருதுப் பெயர்கள்

1. இரவிகுலமாணிக்கம்
2. இராசராசன்
3. இராசமார்த்தாண்டன்
4. இராசாசிரயன்
5. இராசேந்திரசிங்கன்
6. உய்யக்கொண்டான்
7. கீர்த்திபராக்கிரமன்
8. கேரளாந்தகன்
9. சத்திரியசிகாமணி
10. சயங்கொண்டசோழன்
11. சனநாதன்
12. சிங்களாந்தகன்

13. சிவபாதசேகரன்
14. சோழநாராயணன்
15. சோழமார்த்தாண்டன்
16. சோழேந்திரசிங்கன்
17. தெலுங்ககுலகாலன்
18. நிகரிலிச்சோழன்
19. நித்தவிநோதன்
20. மும்முடிச்சோழன்
21. பாண்டிய குலாசனி

## 13. முதலாம் இராசராசனின் தேவியர்

1. ஒலோக மாதேவி
2. வானவன் மாதேவி
3. சோழ மாதேவி
4. திரைலோக்ய மாதேவி
5. பஞ்சவன்மாதேவி ஆன தில்லை அழகியார்
6. அபிமானவல்லி
7. இலாட மாதேவி
8. பிருதிவி மாதேவி
9. மீனவன் மாதேவி
10. வீரநாராயணி
11. வில்லவன் மாதேவி

## 14. இலக்கியங்கள் இயம்பும் இராசராசன்

"தூதற்காப் பண்டு பகலொன்றில் ஈரொன்பது
சுரமுங்கொண்டு மலைநாடு கொண்டோன்"

- விக்கிரம சோழன் உலா : 32-34

"ஏறிப் பகலொன்றில் எச்சுரமும் போயுதகை
நூறித்தன் றூதனை நோக்கினோன்"

- குலோத்துங்க சோழன் உலா : 46-46

"மதகயத்தால் ஈரொன்பது சுரமுகட்டித்
துதகையைத் தீயுத்த உரவோன்"
- இராசராசசோழன் உலா : 40-42

"சத்யநாள் விழா உதியர் மண்டலம்
தன்னில் வைத்தவன் தனியோர் மாவின்மேல்
உதயபானு வொத்துதகை வென் றகோன்
ஒருவகை வாரணம் பல கவர்ந்தும்"
- கலிங்கத்துப் பரணி பாடல் : 201

"அருமொழிதன் கோயிலடரசர் மிண்டித்
திருமகுடக் கொடிக டேய்த்த - பருமணிக்கல்
ஓதத் தமுதனைய வொண்ணுதலார் மென்மலராம்
பாதத்தி னூன்றும் பால்"
- வீரசோழியம் உரைமேற்கோள் பாடல்

## 15. முதலாம் இராசராசன் ஆட்சிப் பரப்பு

இராசராசனின் ஆட்சிப்பரப்பு சோழநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு, கொங்குநாடு, சேரநாடு என்று தமிழ்நாடு முழுவதையும் உள்ளடக்கியிருந்ததோடு குடமலைநாடு (குடகு பகுதி), கங்கபாடி (கர்நாடகத்தின் தென்பகுதி, சேலம் மாவட்டத்தை ஒட்டியது), நுளம்பபாடி (கர்நாடகத்தின் ஒரு பகுதி, ஆந்திரத்தின் பெல்லாரி மாவட்டம்), தடிகைபாடி (மைசூர் பகுதி), வேங்கைநாடு (கிருஷ்ணா, கோதாவரி ஆறுகளுக்கு இடைப்பட்ட சாளுக்கியநாடு), கலிங்கநாடு (ஒரிசா), சித்புலிநாடு (நெல்லூர்ப்பகுதி), பழந்தீவு பன்னீராயிரம் (சேர நாட்டிற்கு தென் மேற்கே அரபிக்கடலில் உள்ள மாலத்தீவுகள்) ஆகிய நாடுகளிலும் பரவியிருந்தது.

## 16. இலங்கையில் இராசராசன் கோயில்

இராசராசன் இலங்கையை முழுவதும் வென்றான். அதனால் இவனுக்கு 'சிங்களாந்தகன்' (அந்தகன்-யமன்,

சிங்களத்திற்கு யமன் போன்றவன்) என்ற பெயருண்டு. இலங்கை மாந்தோட்டத்தில், இவனது அதிகாரியால் 'இராசராசீஸ்வரம்' என்ற கோயில் கட்டப்பட்டது. இலங்கையைத் தன் பெயரால் 'மும்முடிச் சோழமண்டலம்' என்று பெயரிட்டான். தஞ்சைப் பெரிய கோயில் வழிபாட்டிற்கு இலங்கையிலும் நிலம் கொடுக்கப்பட்டது.

## 17. இராசராசன் எடுப்பித்தக் கோயில்கள்

தஞ்சைப் பெருவுடையார் கோயில், மதகடிப்பட்டு குடங்குழி மாதேவர் கோயில் (விழுப்புரம்), மேல்பாடி சோழேந்திர சிம்மேஸ்வரர் கோயில் (வேலூர்), மேல்பாடி அரிஞ்சிகை ஈஸ்வரம் (வேலூர்), திருமுக்கூடல் செம்பியன் மாதேவி பெருமண்டபம் (காஞ்சிபுரம்) ஆகியவை இராசராச சோழனால் எடுப்பிக்கப்பட்டக் கோயில்கள் என்று கல்வெட்டுகள் மூலம் தெரிகின்றது.

## 18. இராசராசன் காலக் கோயில்

| | |
|---|---|
| தஞ்சை மாவட்டம் | : திருவையாறு, திருவலஞ்சுழி, அழகாதிரிபுத்தூர், திருச்செங்காட்டங்குடி, திருவிராமீசுவரம், திருக்கடையூர், திருப்புகளூர், நாகப்பட்டினம், திருக்களர், திருக்கரவாசல். |
| திருச்சி மாவட்டம் | : திருநெடுங்குளம், திருமங்கலம். |
| கரூர் மாவட்டம் | : மேட்டு மருதூர் |
| புதுக்கோட்டை மாவட்டம் | : நார்த்தாமலை. |
| மதுரை மாவட்டம் | : சோழவந்தான். |
| விழுப்புரம் மாவட்டம் | : பிரமதேசம், எண்ணாயிரம், எசாலம், திருக்களர், திருமுக்கூடல், சிவபுரம், ஆர்ப்பாக்கம், அகரம், மரக்காணம், உலகாபுரம். |
| திருநெல்வேலி மாவட்டம் | : ஆத்தூர், திருநெல்வேலி, சேர மாதேவி, திருவாலீஸ்வரம். |

| | |
|---|---|
| காஞ்சிபுரம் மாவட்டம் | : மாம்பாக்கம், எமப்பேரூர். |
| திருவண்ணாமலை (ம) வேலூர் மாவட்டம் | : சோழபுரம், களக்காட்டூர், செங்குன்றம், திருமலை, மேல்பாடி. |

### 19. முதலாம் இராசராசன் பெருவுடையார் கோயிலுக்கு கொடுத்தவை

தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு இராசராசன் கொடுத்தவை: பொற்கலங்கள் 41,559 கழஞ்சு எடை, வெள்ளிக்கலங்கள் 50,650 கழஞ்சு எடை, அணிகலன்கள் 10,200 கழஞ்சு எடை, மேலும் ஆண்டுதோறும் 1,16,000 கலன் நெல்லும், 1,100 காசும் வருமானமுள்ள ஊர்களும் கொடுத்துள்ளான்.

### 20. இராசராசனின் பெயர் பெற்ற நாடுகள்

| | |
|---|---|
| மும்முடிச் சோழமண்டலம் | .... இலங்கை |
| இராசராச மண்டலம் | .... பாண்டிநாடு |
| ஜெயங்கொண்ட சோழமண்டலம் | .... தொண்டைநாடு |
| நிகரிலிச் சோழமண்டலம் | .... நுளம்பபாடி |
| முடிகொண்ட சோழமண்டலம் | .... கங்கபாடி |

### 21. முதலாம் இராஜராஜனின் மெய்க்கீர்த்தி

ஒவ்வொரு கல்வெட்டுத்துவகத்திலும் அரசனின் வெற்றி, பிற புகழ்களைப் பேசும் 'மெய்க்கீர்த்தி'யைப் புகுத்தியவன் இராசராச சோழன். அவனது மெய்க்கீர்த்தி

"திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்கள ரீழமண்டலமும்

இரட்ட பாடி யேழரை இலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமும்
திண்டிரல் வென்றித் தண்டாற் கொண்ட
தன்னெழில் வளரூழியுள் ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு"

## 22. முதலாம் இராசராசன் கல்வெட்டுகள்

இதுவரை 2000க்கும் மேற்பட்ட இராசராசன் காலக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. தமிழ்நாட்டில் மட்டுமில்லாது கேரளம். கர்நாடகம், ஆந்திரம். இலங்கை ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளன.

இவனது 4-வது ஆண்டு வரை (கி.பி. 989) கோவி 'ராசராசகேசரி' என்று தொடங்கும். அதற்குப் பிறகு 8-வது ஆண்டு வரை (கி.பி.993) கலமறுத்தருளிய கோவி ராசராசகேசரி என்று தொடங்கும். அதன்பிறகு இவனது 'திருமகள் போல' என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும்.

## 23. கடாரத்திலும் இராசராசன் செல்வாக்கு

ஜாவா, சுமத்திரா, தாய்லாந்து, மலேயா போன்ற கடல்கடந்த இடங்களிலும் இராசராசனின் மதிப்பு சிறப்புற்றிருந்தது. கடாரத்து மன்னன் சூளாமணிவர்மன் இராசராசனிடம் கொண்ட நட்புக் காரணமாக நாகப்பட்டினத்தில் 'இராசராசப் பெரும்பள்ளி' என்ற பௌத்த விகாரை கட்டினான். அதனை அவன் மகன் விஜயோத்துங்கவர்மன் முடித்தான். இந்த புத்தர் கோயிலுக்கு இராசராசன் ஆனைமங்கலம் என்ற ஊரைத் தானமாக அளித்துச் செப்பேடு வழங்கினான். இச்செப்பேடு இன்று ஹாலந்து (நெதர்லாந்து) நாட்டு லெய்டன் அருங்காட்சியகத்தில் உள்ளது.

## 24. முதலாம் இராசராசன் காசு

இன்று தமிழ்நாட்டில் எந்தப் பகுதியிலும் ஒரு பழைய காசு கிடைக்கின்றதென்றால் அது இராசராசன் காசுதான். அதிகம் கிடைக்கும் செம்பாலான இக்காசுகளில் ஒருபுறம் மன்னன் ஒருவன் அமர்ந்த நிலையில் மலர் ஒன்றை முகர்வதுபோல இருக்கும். அதன் அருகே 'ராஜராஜ' என்று நாகரி எழுத்தில் எழுதியிருக்கும். மறுபுறம் மன்னன் நின்ற நிலையிலும், அருகே குத்துவிளக்குகளும் காணப்படும்.

பாண்டிய நாட்டில் புழக்கத்தில் இருந்த இவனது காசுகளில் மீனும், சேர நாட்டில் திருவடியும், சோழ நாட்டில் புலியும் காணப்படும்.

இவனது பொற்காசுகள் ஐந்திற்கு ஒரு நவரத்தின மோதிரமும், ஒன்றிற்கு 1556 வாழைப்பழங்களும் அன்று கிடைத்தன.

## 25. முதலாம் இராசராசன் காலத்துப் பொருள் மதிப்பு

| | | |
|---|---|---|
| 1 நாழி பருப்பு | .... | 3 நாழி நெல் |
| 1 ஆழாக்கு மிளகு | .... | 4 நாழி நெல் |
| 1 நாழி நெய் | .... | 1 தூணி நெல் |
| 1 நாழி தயிர் | .... | 2½ நாழி நெல் |
| 1 வாழைப்பழம் | .... | ½ நாழி நெல் |
| 1 நாழி எண்ணெய் | .... | 1 தூணி நெல் |
| 1 பலம் மஞ்சள் | .... | 2 நாழி நெல் |
| 1 காசு | .... | 8 கலம் நெல் |
| 1 காசு | .... | 60 பலம் சந்தனம் |

## 26. இராசராசன் வெற்றிக்கு உதவிய வீரர்கள்

1. பெருந்தரம் உத்தரங்குடையான் கோன்வீதிவிடங்கனான வில்லவன் மூவேந்த வேளான்.
2. பெருந்தரம் மாராயன் இரா்ஜராஜன்
3. பெருந்தரம் கண்டாச்சன் பட்டாலகனான நித்தவினோத விழுப்பரையன்.
4. பெருந்தரம் ஆலத்தூர் உடையான் காளன் கண்ணப்பனான இராஜகேசரி மூவேந்தவேளான்.
5. பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்தவேளான்.
6. உடையார் இராஜராஜ தேவருக்கு நடுவிருக்கை செய்த இராஜேந்திர சிங்க வளநாட்டு மிறைக் கூற்று, காமரவல்லிச் சதுர்வேதி மங்கலத்து கோட்டையூர் பட்டன் பூவத்தன் பூவத்தனார்.
7. பெருந்தரம் நித்தவினோத வளநாட்டு ஆவூர் கூற்றத்து செம்பங்குடிச் செம்பங்குடையான் அமுதன் தேவனான இராஜவித்யாதர விழுப்பரையன்.
8. உய்யக்கொண்டான் தெரிந்த திருமஞ்சனத்தார் வேளத்து பெண்டாட்டி வரகுணன் எழுவத்தூர்.
9. உடையார் ஸ்ரீஇராஜராஜ தேவர் மும்முடி சோழத் தெரிந்த பரிவாரத்தார்.
10. சேநாபதி குரவன் உலகளந்தானான இராஜராஜ மஹாராஜன்.
11. மூலபரிவார விட்டேறான ஜனநாதத் தெரிந்த பரிவாரத்தார்.
12. திருமந்திர ஓலை இராஜகேசரி நல்லூர் கிழவன் காறாயில் எடுத்த பாதம்.
13. பெருந்தரம் உலோக மாராயன்.

14. பெருந்தரம் இராஜகேசரி மூவேந்தவேளான்.
15. சோனகன் சாவூர் பரஞ்ஜோதி.
16. பெருந்தரம் வைரி சங்கரன்.
17. நித்தவினோத வளநாட்டு பாம்புணி கூற்றத்து அரைசூர் உடையான் ஈராயிரவன் பல்லவரயனான மும்முடி சோழ போசன்.
18. பெருந்தரம் நம்பன் கூத்தாடியான ஜெயங்கொண்ட சோழ பிரும்ம மஹாராஜன்.
19. பெருந்தரம் வயலூர்க் கிழவன் திருமலை வெண்காடன்.
20. பெருந்தரம் அருமொழி பல்லவரையன்.
21. பெருந்தரம் நித்தவினோத வளநாட்டு மஹாராஜன்.
22. பெருந்தரம் வயிரி அருமொழியான கரிகால கர்ணப் பல்லவரையன்.
23. பெருந்தரம் கோன் குற்றியான அருமொழிப் பல்லவரையன்.

## 27. சோழர் காலச் செப்பேடுகள்

| | | |
|---|---|---|
| 1. உதயேந்திரம் செப்பேடு | .... | பராந்தக சோழன் காலத்தில் இரண்டாம் கங்கமன்னன் பிருதிவிபதி வெளியிட்டது. |
| 2. வேளஞ்சேரி செப்பேடு | .... | பராந்தகசோழன் |
| 3. அன்பில் செப்பேடு | .... | சுந்தரசோழன் |
| 4. பள்ளன் கோயில் செப்பேடு | .... | சுந்தர சோழன் |
| 5. திருச்செங்கோடு செப்பேடு 1 | .... | சுந்தர சோழன் |
| 6. திருச்செங்கோடு செப்பேடு 2 | .... | சுந்தர சோழன். |
| 7. சென்னை அருங்காட்சியகச் செப்பேடு | .... | உத்தமசோழன் |
| 8. லெய்டன் பெரிய செப்பேடு | .... | முதலாம் இராசராசன் |
| 9. கரந்தைச் செப்பேடு | .... | முதலாம் இராசேந்திரன். |
| 10. திருவாலங்காட்டுச் செப்பேடு | .... | முதலாம் இராசேந்திரன் |

11.எசாலம் செப்பேடு .... முதலாம் இராசேந்திரன்
12.திருக்களர் செப்பேடு 1 .... முதலாம் இராசேந்திரன்
13.திருக்களர் செப்பேடு 2 .... முதலாம் இராசாதிராசன்
14.சாராலாச் செப்பேடு .... வீரராசேந்திரன்
15.லெய்டன் சிறிய செப்பேடு.... முதலாம் குலோத்துங்கன்
16.திருக்களர் செப்பேடு 3 .... முதலாம் குலோத்துங்கன்
17.திருக்களர் செப்பேடு 4 .... இரண்டாம் இராசாதிராசன்
18.திருக்களர் செப்பேடு 5 .... மூன்றாம் குலோத்துங்கன்
19.திருஇந்தளூர் செப்பேடு .... முதலாம் இராசாதிராசன்
.... இரண்டாம் இராசேந்திரன் வெளியிட்டது.

## 28. சோழர் காலத்திய வெளிநாட்டினர் குறிப்புகள்

ஆல்பரூணி (கி.பி. 1030) .... அரேபியர்
சௌஜ"குவா, சுபான்சி என்ற நூல் (கி.பி. 1125) .... சீனர்
சீன்சூ-கூ-பி (கி.பி.1178) .... சீனர்
தூதுக் குழுக்கள்(கி.பி.1279-92) .... சீனர்
மான் ஆவன்ணம் (கி.பி.1084-1112)
மார்க்கோபோலோ (கி.பி. 1293) .... ஐரோப்பியர், வெனிஸ்
மான்டிகார் வினோஹான் (கி.பி. 1292-93)
அபுல்போ (கி.பி. 1273-1331)

## 29. தஞ்சைப் பெருவுடையார்க் கோயில்

முதலாம் இராஜராஜன் கி.பி 985 முதல் கி.பி.1014 வரை முப்பது ஆண்டுகள் சோழ நாட்டின் பேரரசனாக விளங்கினான். புவியோர் போற்றும் வகையில் இராசராசன் தன் பெயரில் 'இராஜராஜேஸ்வரம்' என்ற சிவாலயத்தை தஞ்சையில் கட்டினான். கி.பி. 1004இல் ஆரம்பிக்கப்பட்ட தஞ்சை பெரிய கோயில் கி.பி. 1010ல் கட்டிமுடிக்கப்பட்டது. இக்கோயில் 793 அடி நீளமும், 397 அடி அகலமும் உடையது.

தஞ்சை பெரிய கோயிலை சுற்றியுள்ள திருமதில் இராஜராஜனின் சேனாதிபதி கிருஷ்ணன் இராமனால் கட்டப்பட்டது. இக்கோயிலுக்கு நான்கு புறங்களிலும் வாயில்கள் உண்டு. கோயிலின் முன்புறம் ஒன்றடுத்து ஒன்றாக இரண்டு வாயில்கள், கோபுரங்களுடன் உள்ளன. முதல் வாயில் 'இராஜராஜன் திருவாயில்' என்றும் அடுத்தது 'கேரளாந்தகன் திருவாயில்' என்றும் அவனால் பெயரிடப்பட்டன.

தஞ்சைப் பெரிய கோயிலை உருவாக்கிய தச்சன் 'வீரச்சோழன் குஞ்சர மல்லனான இராஜராஜப்பெருந் தச்சன்' என்பவனாவான். இக்கோயில் 216 அடி உயரம் கொண்டது. இக்கோயில் மலைப்போல் அமைந்திருப்பதால் இக்கோயிலை 'தக்ஷிணமேரு' என்று பெயரிட்டு இராஜராஜன் அழைத்துள்ளான்.

கோயில் கீழே இரண்டு சுவர்கள் எழுப்பப்பட்டு அதன்மீது உயரமாக அமைக்கப்பட்டது. இரு சுவர்களின் இடைவெளியில் இரண்டு அடுக்குகளில் நாம் நடந்து செல்லலாம். ஒன்றில் நாட்டிய கரணச் சிற்பங்களும், மற்றொன்றில் ஓவியங்களும் உள்ளன. விமானத்தின் நடுப்பகுதி இடைவெளி கொண்டது.

### 30. தஞ்சைக் கோயிலை முதலாம் இராசராசன் கட்டியதற்கு ஆதாரம்

முதலாம் இராசராசனின் இருபத்தாறாவது ஆட்சியாண்டு கல்வெட்டில் தஞ்சை பெருவுடையார் கோயில் முதலாம் இராசராசனால் கட்டப்பட்டதாகப் பொறிக்கப்பட்டுள்ளது. கி.பி. 1011-ல் பொறிக்கப்பட்ட அக்கல்வெட்டில் "தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பித்த திருக்கற்றளி ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார்".... என்ற இராசராசனது 26-ஆம் ஆண்டு தஞ்சைக் கல்வெட்டு (கி.பி.1011) அம்மன்னனது வெற்றிகளைப் பற்றி கூறிய பிறகு இச்செய்தி பொறிக்கப்பட்டுள்ளது. நாம் குடுத்தனவும், நம் அக்கன் குடுத்தனவும் மற்றும் குடுத்தார் குடுத்தனவும் கல்லில் வெட்டுக என்று ஆணை இக்கல்வெட்டில் காணப்படுகிறது.

## 31. பெரியக் கோயிலைக் கட்டிய தலைமைச்சிற்பி

உலகம் போற்றும் தஞ்சைப் பெரிய கோயிலை முதலாம் இராசராசனும், திருவையாறு லோகமாதேவீச்சுரம் கோவிலை இராசராசனின் மனைவி லோகமாதேவியும் கட்டியுள்ளனர். புகழ் பெற்ற இவ்விரு கோயில்களையும் கட்டிய தலைமைச் சிற்பிகள் (கட்டட வினைஞர்கள்) பற்றிய குறிப்புகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இத்தலைமைச் சிற்பிகள் "பெருந்தச்சன்" என்று அழைக்கப்பட்டுள்ளனர். தஞ்சை பெருவுடையார் கோயிலை கட்டிய தலைமைச் சிற்பி "வீரசோழன் குஞ்சர மல்லன் ஆன இராஜராஜப்பெருந்தச்சன்" என்பவனாவான். அதேபோன்று திருவையாறு லோகமாதேவீச்சுரம் கோயிலைக் கட்டிய தலைமைச் சிற்பி "தளி செய்த நக்கன் ஆச்சனான கலயுகரம்பைப் பெருந்தச்சன்" என்பவனாவான்.

## 32. முதலாம் இராஜராஜன் கட்டாத கோயில்கள்

தஞ்சைப் பெரியக் கோயிலின் உள்ளே அமைந்துள்ள அம்மன் கோயில், முருகன் கோயில், விநாயகர் கோயில், கருவூர்த் தேவர் கோயில், வராகி கோயில் ஆகியவை முதலாம் இராஜராஜனால் கட்டாத கோயில்களாகும். அம்மன்னன் கட்டாத அக்கோயில்கள் முறையே பிற்காலப் பாண்டியர், தஞ்சை நாயக்கர், மராட்டியர் மற்றும் தற்கால மக்களால் கட்டப்பட்டவையாகும்.

## 33. முதலாம் இராஜராஜன் கட்டியக் கோயில்கள்

பெருவுடையார்க் கோயில், சண்டிகேஸ்வரர் கோயில், திருச்சுற்று மதில்-நடைமாளிகை, இரண்டு வாயிற்கோபுரங்கள் ஆகியவை மட்டுமே முதலாம் இராஜராஜன் காலத்தில் கட்டப்பட்டவையாகும்.

## 34. பெரிய கோயில் பெரிய நந்தி இராசராசன் வைத்ததா?

இல்லை! பெரியநந்தி நாயக்க மன்னர்கள் காலத்தில் வைக்கப்பட்டது. நந்தி உள்ள மண்டபமும் நாயக்கர் காலத்தியது. இம்மண்டபத்தூண்களில் நாயக்க மன்னர்களது

உருவச் சிலைகள் உள்ளன.

### 35. இராசராசன் வைத்த நந்தி எங்கே?

பெரிய நந்திக்கு நேர்தெற்கே திருச்சுற்று நடைமாளிகையில் இன்றும் வெளிர் நிறத்தில் சற்று சிறிதாக உள்ள நந்தியே முதலாம் இராசராசன் வைத்த நந்தியாகும்.

### 36. கருவறையின் மேலுள்ள சிகரக்கல் ஒரே கல்லா?

இல்லை! ஆரஞ்சு பழச்சுளைகளைப் போன்று கற்களைக் கொண்டு வடிவமைக்கப்பட்டுள்ளது. ஒன்றுக்கு மேற்பட்ட அத்தகைய கற்களைக் கொண்டு வட்டவடிவமாக நடுவே கவிழ்த்த தேங்காய் மூடியைப் போன்று உருவாக்கப்பட்டுள்ளது.

### 37. விமானமா? கோபுரமா?

தஞ்சைக் கோபுரம் மிக உயரமானது என்று நாம் சொல்கிறோம். அது தவறு. அதை விமானமென்றே கொள்ளவேண்டும். இறைவன் உள்ள கருவறை மீது கட்டப்படும் அமைப்பு விமானம் எனப்படும். கோபுரம் என்பது நுழைவாயிலின் மீது கட்டப்படுவது. சோழர் காலம் வரை கோபுரம் உயரமற்றதாகவும், விமானம் உயரமுடையதாகவும் அமைக்கப்பட்டன. விசயநகர நாயக்க மன்னர்கள் காலத்தில் கோபுரங்கள் உயரமுடையதாக்கப்பட்டன. மதுரைக் கோபுரம் உயரமானது என்று சொல்வது சரியே. ஸ்ரீவில்லிபுத்தூர், காஞ்சிபுரம், திருவண்ணாமலை, ஸ்ரீரங்கம் கோயில் கோபுரங்கள் உயரமானவை.

### 38. குடமுழுக்கு

இக்கோயில் கல்வெட்டு ஒன்று இராசராசனின் 25-ஆம் ஆட்சியாண்டு 275-வது நாளில் இக்கோயில் விமானத்தில் வைக்க செப்புக் கலசம் கொடுத்ததை தெரிவிக்கிறது. இம்மன்னனின் 25-ஆம் ஆட்சியாண்டு கற்கடக மாதத்து அமரபட்சத்து

புணர்பூசத்து நாளில் தொடங்குகிறது (கி.பி. 1009 ஜூலை 22). இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் 25-ஆம் ஆட்சியாண்டு 275-ஆம் நாள் என்பது கி.பி. 1010 ஏப்ரல் 22ஆம் நாளாகும். இது சித்திரை மாதம் 31-ஆம் நாள் சனிக்கிழமை புணர்பூச நாளில் திகழ்கிறது. எனவே இக்கோயில் குடமுழக்கு விழா கி.பி. 1010 ஏப்ரல் 22-ஆம் நாள் நடைபெற்றது எனத் தெரிய வருகிறது.

### 39. தஞ்சைப் பெருவுடையார்

இக்கோயில் சிவலிங்கம் பாணத்தின் உயரம் 12.5அடி இதனின் சுற்றளவு 23அடி ஆவுடையாரின் சுற்றளவு 55 அடியாகும்.

### 40. ஆடவல்லான் பாதம் பழுது பார்க்கப்பட்டது.

நடராசப் பெருமானுக்கு இராசராசன் வைத்தப் பெயர் ‘ஆடவல்லான்’. இந்தப் பெயரிலேயே எடைக்கல், மரக்கால் முதலியவையும் அவனால் அழைக்கப்பட்டன. அவன் செய்துகொடுத்த நடராசர் செப்புத் திருமேனி (ஆடவல்லான்) பெரிய கோயிலின் முன்பகுதியில் தெற்கு நோக்கிய மண்டபத்தில் உள்ளது. மராட்டியர் காலத்தில் இதன் பர்தம் உடைந்து போகவே மராட்டிய அரசி, அதனைப் பழுதுபார்த்து அப்பாதப்பகுதியிலேயே பழுதுபார்த்த செய்தியையும் கல்வெட்டாக மராட்டிய மொழியில் பொறித்துள்ளார்.

### 41. கோயிலைச்சுற்றிக் கோட்டை மதில்

தஞ்சைக் கோயிலைச் சுற்றி கோட்டை மதில் உள்ளது. இது தஞ்சை மக்களால் சின்னக்கோட்டை, சிவகங்கைக் கோட்டை என அழைக்கப்பட்டது. தஞ்சை நாயக்க மன்னன் சேவப்ப நாயக்கன் கட்டிய கோட்டையிது. கோயிலின் இரண்டு கோபுரங்களுக்கு இடைப்பட்ட பகுதியை கி.பி. 1722இல் பிரஞ்சுக்காரர்கள் ஆயுதக்கிடங்காகப் பயன்படுத்தினர். மீண்டும் 30 வருடம் கழித்து ஆங்கிலேயர்களும் ஆயுதக்கிடங்காகப் பயன்படுத்தினர்.

## 42. இராசராசன் – லோகமாதேவி செப்புத் திருமேனிகள்

மன்னர்களுக்கு கோயில்கள் எடுப்பதும், சிற்பங்கள் வடிப்பதும் வழக்கில் இருந்துள்ளது. முதலாம் இராசராசனுக்கும் அவனது மனைவி லோகமாதேவிக்கும் ஐம்பொன்னால் அம்மன்னனது அதிகாரி சிற்பங்கள் செய்து வைத்ததாக கல்வெட்டுகள் கூறுகின்றன. இராசராசன் ஆட்சியில் கோயில் அலுவலராகப் பணியாற்றிய ஆதித்தன் சூரியன் என்னும் தென்னவன் மூவேந்தவேளான் என்பவன் இராசராசனுக்கும், லோகமாதேவிக்கும் செப்புத்திருமேனிகள் செய்தளித்துள்ளான். அச்செப்புத்திருமேனிகளின் உயரமும், பீடங்களின் உயரமும், கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளன.

## 43. சோழராட்சியில் புகழ்பெற்ற இரு குந்தவையார்

ஒருவர் முதலாம் இராஜராஜனின் தமக்கையார், மற்றொருவர் முதலாம் இராஜராஜனின் மகளாவர். தமக்கை குந்தவை கல்வெட்டுகளில் “அக்கன்” என்று அழைக்கப்படுகிறார். இவ்வரசியாரின் கணவன் வல்லவரையன் வந்திய தேவன். இவள் தஞ்சை பெரியக் கோயிலுக்கு நான்கு செப்புத் திருமேனிகளை வழங்கியுள்ளார். தனது தந்தை சுந்தர சோழனின் பெயரால் ‘‘சுந்தரசோழ விண்ணகர ஆதுலர் சாலை‘‘ என்னும் மருத்துவமனையும் “குந்தவை ஜினாலயம்” என்ற சமணக் கோயிலையும் ஏற்படுத்தியுள்ளார்.

• முதலாம் இராசராசன் தனது தமக்கையார் குந்தவையாரின் மீது கொண்டிருந்த அன்பின் காரணமாய் தனது மகளுக்கு குந்தவையார் என்று பெயரிட்டு அழைத்தான். இக்குந்தவையின் கணவன் வேங்கி நாட்டு மன்னன் சத்திவர்மனின் தம்பி விமலாதித்தன் (கி.பி 1011-1018) ஆகும்.

## 44. சோழ அரசமாதேவியர் அணிந்த அணிகலன்கள்

சோழராட்சியில் அரசகுல மகளிர் சுட்டி, தெய்வவுத்தி, பொற்பூ ஆகிய தலைஅணிகளையும், நெற்றியில் நெற்றிச்சுட்டி, காதுகளில் மகரக்குழை, கழுத்தில் முத்துமாலை, பிறைவடம்,

நட்சத்திரமணிமாலை, வலம்புரிமுத்துக்கள் கோர்த்த வடம், நிரைத்தாலி, மாணிக்கத்தாலி, தாலிமணிவடம் ஆகிய அணிகலன்களை அணிந்துள்ளனர்.

## 45. சோழர் கால மருத்துவமனைகள் (Hospitals)

சோழர் ஆட்சியில் மருத்துவமனைகள் ''ஆதுலர் சாலைகள்'' என்ற பெயரில் நிர்வகிக்கப்பட்டுள்ளன. காஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தில் திருமுக்கூடல் என்ற ஊரில் வீர இராஜேந்திர சோழனின் ஆட்சி காலத்தில் வெங்கடேச பெருமாள் கோயில் நிர்வாகத்தின் கீழ் ''வீரசோழன் ஆதுலர் சாலை'' என்ற மருத்துவமனை செயல்பட்டுள்ளது. அங்கு மருத்துவ விடுதியும் இருந்துள்ளது.

## 46. குந்தவை மருத்துவமனை

முதலாம் இராசராசனின் தமக்கையார் குந்தவை பிராட்டியார் தனது தந்தை சுந்தரசோழனின் பெயரால் "சுந்தரசோழ விண்ணகர் ஆதுலர் சாலை" என்ற மருத்துவமனையை ஏற்படுத்தி அதனை நிர்வகிக்க நிலக்கொடையும் அளித்துள்ளாள்.

## 47. இலவச மருத்துவமனை

விக்கிரம சோழனின் ஆட்சி காலத்தில் திருபுகலூரில் "தேவருடையான் மதுக்கினியான் ஆன விராடராசன்" என்பவன் முடிகொண்ட சோழ பேராற்றின் வடகரையில் ஆதுலர் சாலை ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது. இம்மருத்துவமனையில் அனாதைகளுக்கு மருத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. அனாதைகளுக்கு சிகிச்சையுடன் இலவசமாக உணவும் அளிக்கப்பட்டுள்ளது. இதற்கென்று ஆதுலர் சாலைக்கருகில் மடம் ஒன்று ஏற்படுத்தப்பட்டு அதற்கான நிலக்கொடையும் அளிக்கப்பட்டுள்ளது.

## 48. சோழர் கால மருத்துவக் கல்லூரிகள் (Medical Colleges)

விக்கிரம சோழனின் ஆட்சிக் காலத்தில் திருவாடுதுறையில் மருத்துவக் கல்லூரி ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது. இரண்டாம்

குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் விழுப்புரம் மாவட்டம் பெருவல்லூரில் மருத்துவக் கல்லூரி ஒன்று செயல்பட்டுள்ளது. இக்கல்லூரியில் படித்த மாணவர்களுக்கு சரகசம்ஹிதை, அஷ்டாங்க கிருதம் போன்ற மருத்துவ நூல்கள் கற்பிக்கப்பட்டுள்ளன. இக்கல்லூரி மாணவர்கள் தங்கி படிப்பதற்கு விடுதியும் (மடம்) இருந்துள்ளது. இவ்விடுதியில் மருத்துவ மாணவர்களுக்கு உணவளிக்கப்பட்டுள்ளது. அதற்காக நிலக்கொடையும் அளிக்கப்பட்டுள்ளது.

## 49. சோழர் கால பொதுமருத்துவரும் அறுவை சிகிச்சை மருத்துவரும்

பிற்கால சோழர் ஆட்சி காலத்தில் செயல்பட்ட ஆதுலர் சாலைகளில் (மருத்துவமனைகள்) கைநாடி பார்த்து பொதுப்பிணி நீக்கும் பொதுமருத்துவர்களும் உடற்கூறுகளை ஆராய்ந்து காயம், கட்டி, இரணம் ஆகியவற்றை அறுத்து அறுவை சிகிச்சை செய்யும் அறுவை சிகிச்சை மருத்துவர்களும் பணியாற்றியுள்ளனர். “சவர்ணன் அரையன் சந்திரசேகரன், கோதண்டராமன் அசுவதாமபட்டன்” என்ற பொது மருத்துவர்கள் நோயாளிகளுக்கு மருந்துகளை எழுதிக் கொடுக்கும் பணியினை செய்துள்ளனர். இவர்களுக்கு மாத ஊதியமாக 90 கலம் நெல்லும், 80 காசும் வழங்கப்பட்டுள்ளது. “சல்லியக் கிரியை பண்ணுவான்” என்ற பெயரில் அறுவை சிகிச்சை மருத்துவர்களும் பணியாற்றியுள்ளனர். இவர்களுக்கு மாத ஊதியமாக 30 கலம் நெல்லும், 2 காசும் வழங்கப்பட்டுள்ளது. அத்துடன் இம்மருத்துவர்களுக்கு கொடையாக “மருத்துவக்காணி” என்ற பெயரில் நிலக்கொடையும் அளிக்கப்பட்டுள்ளது.

## 50. அறுவைசிகிச்சை உதவியர் ( Asistant surgean)

நோயாளிகளுக்கு அறுவை மருத்துவம் செய்வதற்கு அறுவைசிகிச்சை உதவியர் ‘‘நாவிதர்‘‘ என்ற பெயரில் இருந்துள்ளனர். இவர்கள் மருத்துவத்தொழிலையும், சவரத்தொழிலையும் செய்துள்ளனர். இவர்களின் மனைவியர் பெண்களுக்கு மகப்பேறு மருத்துவம் செய்துள்ளனர். அதனால் இவர்கள் ‘‘மருத்துவச்சி’’ என்று அழைக்கப்பட்டுள்ளனர். இந்நாவிதர்களுக்கு 15 கலம் நெல் ஊதியமாக அளிக்கப்பட்டுள்ளது.

## 51. மருத்துவ செவிலியர் ( Nurse)

சோழர் ஆட்சியில் மருத்துவர்களுக்கு உதவியாக மருத்துவப் பணிப்பெண்கள் இருந்துள்ளனர். இவர்களை "மருந்து அடும் பெண்டுகள்" என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இம்மருத்துவ செவிலியர்களுக்கு ஊதியமாக 30 கலம் நெல்லும் 1 காசும் வழங்கப்பட்டுள்ளது.

## 52. மருந்து வகைகள்

பிற்கால சோழர் ஆட்சி காலத்தில் ஆதுலர் சாலைகளில் (மருத்துவமனை) நோயாளிகளுக்குத் தேவையான மருந்துகள் இருப்பு வைக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டுள்ளனர். வீரசோழன் ஆதுலர் சாலையில் ஓர் ஆண்டிற்கு தேவையான மருந்துகள் இருப்பில் வைக்கப்பட்டிருந்ததாகக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

## 53. மருந்துகள் இருப்பு விவரம்

| | மருந்து | | அளவு |
|---|---|---|---|
| 1. | பிராமணய்ம்-கடும்பூரி | .... | 1 |
| 2. | வாசா-கரிதகி | .... | 2 படி |
| 3. | கோ-முத்ரா-ஹதஹி | .... | - |
| 4. | தஸ-மூலா-ஹதஹி | .... | 1 படி |
| 5. | பலாடக-ஹதஹி | .... | 1 படி |
| 6. | கத்தீரம் | .... | 1 படி |
| 7. | பலாகேரண்ட தைலம் | .... | 1 படி |
| 8. | பஞ்சாக தைலம் | .... | 1 தூணி |
| 9. | லகணாதி ஏரண்ட தைலம் | .... | 1 தூணி |
| 10. | உத்தம சரணாதி தைலம் | .... | 1 தூணி |

| | | | |
|---|---|---|---|
| 11. | பில்லாதி கிரீதம் | .... | 1 தூணி |
| 12. | மண்டுகர வதகம் | .... | 1 பதக்கு |
| 13. | திராவட்டி | .... | 2,000 |
| 14. | விமலை | .... | தாழி |
| 15. | சுனேத்திரி | .... | 2,000 |
| 16. | தம்ராதி | .... | 2,000 |
| 17. | வஜ்ர கல்பம் | .... | தூணி-பதக்கு |
| 18. | கல்யாண லவணம் | .... | தூணி-பதக்கு |

**54. மூன்று கை மாசேனை**

இது முதலாம் இராசராசனின் படைப்பிரிவுகளில் ஒன்று இப்படை பிரிவு பாண்டிய நாட்டுப் பகுதியில் திருநெல்வேலி, அம்பாசமுத்திரம், சேரன்மாதேவி. திருவாலீஸ்வரம் போன்ற இடங்களில் நிலையாக இருந்துள்ளது. முதலாம் குலோத்துங்கன் காலம்வரை இப்படைப்பிரிவு அப்பகுதிகளில் நிலைக்கொண்டிருந்துள்ளது. மலைநாட்டிற்கு செல்லும் பெருவழியில் இப்படை பிரிவை நிறுத்தி மலைநாட்டிலிருந்தது தூக்குதல் நடைபெறா வண்ணம் தடுப்பதற்காக இராசராசன் இம்மூன்றுகை மாசேனையை பயன்படுத்தியதாக தெரியவருகிறது.

**55. அடிமைகள்**

கிரேக்க ரோமானிய நாடுகளில் பொருள்களின் தரத்திற்கேற்ப சந்தைகளில் விலை கூவி விற்ப்பதைப் போன்று அடிமை மனிதர்கள் அவர்களின் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப விலைக் கூவி விற்கப்பட்டுள்ளனர். அதேபோன்று கி.பி.11-12ஆம் நூற்றாண்டுகளில் சோழ நாட்டில் அடிமைகள் விற்கப்பட்ட செய்தி பல கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

அடிமைகளில் ஆண்களும், பெண்களும் இருந்தனர். வேளான் மகன், கல்தச்சன், தேவரடியார், இடைக்குடி மக்கள், நெல், குத்தும் பெண்கள், நந்தவனக் குடிகள், பறைக் கொட்டும் உவச்சர் ஆகியோர் அடிமைகளாக இருந்துள்ளனர்.

**56. அடிமைகளாக ஆக்கப்பட்ட மக்களின் வகை - 15**

1. தாசியின் மக்கள்
2. விலைக்கு வாங்கப்பட்டோர்
3. கொடையாகப் பெறப்பட்டோர்
4. பெற்றோரால் விற்கப்பட்டோர்
5. வெள்ளத்தின் போது பாதுகாக்கப்பட்டோர்
6. பிரமாணத்தின் மூலம் அடிமையானோர்
7. கடன் காரணமாக அடிமைப்பட்டோர்
8. போரில் பிடிப்பட்டோர்
9. சூதில் வெல்லப்பட்டோர்
10. தாமே வழிய வந்து அடிமையானோர்
11. வறுமையால் அடிமைப்பட்டோர்
12. தன்னைத்தானே விற்றுக்கொண்டவர்
13. இறைவனுக்கு அடிமையானோர்
14. அடிமைப் பெண்ணை திருமணம் செய்து அதன் வழி அடிமையானோர்
15. குறிப்பிட்ட கால அடிமைகள்

இவ்வாறு பதினைந்து காரணங்களால் மக்கள் அடிமையாக்கப்பட்டனர். சமுதாயத்தில் இழிவானதாக கருதப்படும் பணிகளை இம்மக்களைக் கொண்டு செய்தனர். இவர்களை தாசர், தாசன், தாசி என்று மனு குறிப்பிடுகின்றது.

**57. அடிமைகளின் பரிமாற்றம்**

ஒன்று தன்னை தானே விற்றுக்கொள்ளுதல், இரண்டு தன் மனைவி மக்களையும் விற்றுக்கொள்ளுதல், மூன்று இனிவரும் சந்ததிகளையும் சேர்த்து அடிமையாக்குவதாக எழுதிக் கொடுத்து விற்றுக்கொள்ளுதல். ஒருவர் தம்முடைய அடிமைகளை தனிப்பட்ட ஒருவருக்கோ, கோயிலுக்கோ. மடத்திற்கோ விட்டுவிடுதல் அல்லது தானமாக அளித்தல் என்று பல வகைகளில் அடிமைகளின் பரிமாற்றம் நடைப்பெற்றுள்ளது.

**58. அடிமைகளின் விற்பனை**

கி.பி 1201-ல் பஞ்சம் ஏற்பட்டபோது வாழ வழியின்றி வெள்ளாளன் ஒருவன் தன்னையும், தன் மனைவியையும், தன் மக்களையும் 110 காசுகளுக்கு விற்றுக்கொண்டுள்ளான். கி.பி 1219-ல் 5 பெண்களும், 5 ஆண்களும் வழிவழி அடிமையாக 1000 காசுகளுக்கு விற்றுக்கொண்டுள்ளனர். கி.பி. 1175-ல் தேவரடியார் 4 பேர் 700 காசுகளுக்கு விற்றுக்கொண்டுள்ளனர். கிபி. 1210-ல் வெள்ளாளன் ஒருவனும் அவன் மனைவியும் 110 காசுகளுக்கு மடத்திற்கு அடிமைகளாக விற்கப்பட்டுள்ளனர். நாங்கூர் அந்தணன் ஒருவன் தன்னுடைய அடிமைகளில் பெண்கள் உட்பட 7 பேரை ஒருமுறையும் 15 பேரை மற்றொரு முறையும் விற்றுள்ளான். அத்துடன் 2 பெண்களும், 5 ஆண்களும் 30 காசுகளுக்கும், 15 பேர் 30 காசுகளுக்கும், 6 பேர் 13 காசுகளுக்கும் அடிமைகளாக விற்கப்பட்ட செய்தி கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

**59. அடிமைகளின் உடைமையாளர்கள்**

தஞ்சை மாவட்டம் திருகொருக்கை வீரட்டானத்தில் நூற்றுக்கு மேற்பட்ட ஆண்-பெண் அடிமைகளின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. ''திருவேகம்பமுடையான் செந்தாமரைக் கண்ணன் ஆன வைராதராயன்'', ''சோழகுலவல்லி நல்லூர் புல்லாலி வேளான் மனத்துக்கினியான் ஆன கனகராயன்'', ''எதிரிலி சோழ கங்கநாடாழ்வான்'', ''நெடுவாசலுடையான்

மருதராஜ்யங்கொண்டான்", "தேவர் ஆரியச் சக்கரவத்திகள்", "நந்திவர்ம மங்கலத்து மத்யஸ்தன்", "காரைக் காரோணத்து கணக்கன்" ஆகியோர் அடிமைகளை வைத்திருந்தனர்.

### ௬௦. அடிமைகளுக்கு முத்திரை

பொருளுடைமை போன்று அடிமைகளும் சிலரின் சொத்தாக இருந்துள்ளனர். அவர்களை தானமாகவோ, விற்பனையாகவோ வழங்கும் பொழுது ஆவணங்களில் பதிவு செய்யும் முறை இருந்துள்ளது. அடிமை விற்பனை பதிவு ஆவணத்திற்கு "ஆள் விலைப் பிரமாண இசைவுத்தீட்டு" என்று பெயர். இடைக்குடி மக்களை அடிமைகளாக விற்கும்பொழுது முத்திரை இட்டு வழங்கியுள்ளனர். இதனை "திருவிலச்சினை இட்டுச் சந்திராதித்தவரை இவ்விடையரை நாம் கொள்ள" என்று கல்வெட்டு குறிப்பிடுகின்றது. அரண்மனை வேளத்திற்கு வழங்கப்பட்ட அடிமைப் பெண்களுக்கு தவறுதலாக கோயிலுக்குரிய முத்திரை இடப்பட்டதால் அது கண்டறியப்பட்டு அரண்மனைக்குரிய முத்திரை மீண்டும் இடப்பட்டதாக கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

### ௬௧. சோழர் கால நீள, கன பரிமாண அளவுகள்

தஞ்சை மாவட்டம் திருவையாறு உலோகமாதேவீச்சுரம் கோயில் கல்வெட்டில் இவ்விவரம் காணப்படுகின்றது.

**நீள அளவுகள்**

| | | |
|---|---|---|
| 100 குழி | .... | 1 மா |
| 2000 குழி | .... | 1 வேலி |
| 20 மா | .... | 1 வேலி அல்லது 1 நிலம் |

**கன பரிமாண அளவுகள்**

| | | |
|---|---|---|
| 8 நாழி | .... | 1 குருணி |
| 4 குருணி | .... | 1 தூணி |
| 3 தூணி | .... | 1 கலம் |

## ௬2. சோழர் ஆட்சியில் கலப்புமணம்

சோழர் ஆட்சியில் அரச குலத்தில் பிறந்த பெண்ணும், வணிகக்குடியில் பிறந்த ஆணும் கலப்புமணம் புரிந்துள்ளனர். இவர்களுக்கு பிறந்த மக்கள் 'பிரதிலோமர்' என்றும், 'அயோகவன்' என்றும் அழைக்கப்பட்டனர். இவர்கள் இறைவனுக்கும், அரசருக்கும், அந்தணருக்கும் ஆடைகள் நெய்து கொடுக்கும் வேலையை செய்துள்ளனர். இவர்களுக்கு இறையிலியாக நிலங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

அரசகுலத்தைச் சேர்ந்த ஆடவனும் கருணீக இனத்தைச் சேர்ந்த பெண்ணும் கலப்புமணம் புரிந்துள்ளனர். இவர்களுக்குப் பிறந்த மக்கள் 'அனுலோமர்' என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் தேர் செய்தல், கட்டிட வேலைச் செய்தல் சிற்பவேலை செய்தல் போன்ற பணிகளை மேற்கொண்டனர். இவர்கள் பூணூல் அணிந்துகொள்ளும் உரிமையை பெற்றிருந்தனர்.

## ௬3. கோயில் தங்கம் திருட்டு

சோழ நாட்டில் விருதராச பயங்கரவளநாட்டில் மெலட்டூர் நாட்டு பந்தநல்லூர் சிவன்கோயிலில் இறைவனுக்கு அணிகலன்கள் செய்வதற்காக கோயில் கருவூலத்தில் வைத்திருந்த தங்கத்தினை அக்கோயிலில் பணிபுரிந்த சிவபிராமணர்கள் திருடிக்கொண்டனர். இத்திருட்டினை அக்கோயிலின் பதிபாதமூலம், பட்டுடை தேவக்கன்மிகள், மேற்பார்வையாளர் மாகேசுவரக் கண்காணி, ஸ்ரீகாரியம் செய்வோர், அரசு அலுவலர்கள் ஆகியோர் ஒன்று கூடி விசாரணை செய்து குற்றம் கண்டறியப்பட்டு தண்டனை அளித்துள்ளனர். தண்டனையாக சிவபிராமணர்களின் பூஜை உரிமை பரிக்கப்பட்டு அவ்வுரிமையை 180 காசுகளுக்கு விற்பனை செய்து கோயில் கணக்கில் சேர்த்தனர். அத்துடன் அச்சிவபிராமணர்களும், அவர்களின் வழித்தோன்றல்களும் அச்சிவன் கோயிலில் நுழைவதற்கு தடை விதித்தனர்.

## 64. இறைவனின் அணிகலன்கள் கையாடல்

அதிராசேந்திர சோழன் ஆட்சியிலும், முதலாம் குலோத்துங்கன் ஆட்சியிலும், மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியிலும், திருப்பனந்தாள் கோயில் அர்ச்சகர்கள் இறைவனின் அணிகலன்களையும் பூசை பொருட்களையும் மூன்றுமுறை திருடியமை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அக்கோயில் கருவூல அலுவலர் இராசராச மூவேந்த வேளான், கருவூல சேனாபதி பல்லவராயன், சேனாபதி நந்தியராசன் ஆகியோர் தணிக்கை செய்தபொழுது கையாடல் கண்டறியப்பட்டு தண்டனை அளிக்கப்பட்டுள்ளது. அந்த அணிகலன்களின் மதிப்பான 540 காசுகளை மீண்டும் கோயில் கருவூலத்தில் செலுத்திட மன்னன் ஆணையிட்டான். அர்ச்சகர்களில் தண்டனைத் தொகையை செலுத்த இயலாத பாண்டடன் குமாரசாமி என்பவனுக்கு தன் தண்ட தொகைக்கு இணையாக தனது கோயில் பூசை உரிமையில் மாதத்திற்கு 4½ பங்கினை இழப்பதாக தண்டனை வழங்கப்பட்டுள்ளது.

## 65. கோயில் சொத்துக்கள் திருட்டு

கி.பி 1225ல் மூன்றாம் இராசராசன் ஆட்சி காலத்தில் கோயில் சொத்துக்களையும், இறைவனின் துணிகளையும், கோயில் செங்கற்களையும் சகோதரர் இருவர் கொள்ளையடித்துவிட்டனர்: கோயில் அதிகாரிகளின் மூலம் அரசனிடம் புகார் செய்யப்பட்டது. மன்னனே ஜெயங்கொண்ட சோழ சதுர்வேதிமங்கலத்தில் தங்கி விசாரனை செய்தான். குற்றம் உறுதி செய்யப்பட்டதால் குற்றவாளிகளின் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டு 40,000 காசுகளுக்கு விற்பனை செய்யப்பட்டு கோயில் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளது.

## 66. ஸ்ரீகாரியம் செய்வோர்

கோயில்களுக்கு மன்னர்களும், மக்களும் மிகுதியான கொடைகளை வழங்கினர். அவற்றை கோயில் ஆட்சிக்குழுக்கள்

நிர்வகித்தன. எனினும் பல்வேறு முறைகேடுகள் நடந்தன. அவற்றுள் மிக முக்கியமான வழக்குகளில் மன்னனே நேரில் தலையிட்டு விசாரணை மேற்கொண்டு தண்டனை வழங்கினான். கோயில் முறைகேடுகளை தடுக்கவும், திருத்தவும், கணக்குகளைத் தணிக்கை செய்யவும், "ஸ்ரீகாரியம்" என்ற அலுவலர்களை நியமனம் செய்துள்ளனர். "ஸ்ரீகாரியம் செய்கின்ற", "ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற", "ஸ்ரீகாரியம் திருத்துகின்ற", என்று பல பெயர்களில் கோயில் அலுவலர்கள் சோழர் காலத்தில் செயல்பட்டுள்ளனர். அதிகாரி, சேனாபதி போன்ற உயர்அலுவலர்களும் இருந்துள்ளனர். முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலத்தில் இவ்வலுவலர்களின் செயல்பாடு சிறப்பாக இருந்துள்ளதை கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. "ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற கவிசிகன் நக்கன் மாறன்", "ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அயன்காமக்கோட்டனார்" போன்றோர் கோயில் கண்காணிப்பு அலுவலர்களாகப் பணியாற்றியுள்ளதைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

## ௬7. கண்டப்பத்திரம் போடுதல்

வழக்குகளில் சான்றுகள் கிடைக்க பெறாத சூழ்நிலையில் குற்றம் செய்ததாக கருதப்படுபவரிடம் மேற்கொள்ளப்படும் விசாரணை முறைக்கு கண்டப்பத்திரம் போடுதல் என்று பெயர். குற்றம் சுமத்துவோர் விரும்பும் கோயிலுக்கு குற்றம் சுமத்தப்பட்டவர் குளித்து ஈரஉடையுடன் அரளிப்பூமாலையை அணிந்து கொண்டு கோயிலுக்குள் நுழைந்து, கோயிலில் ஏற்றி வைக்கும் கற்பூர சூடத்தை தன்மீது சுமத்தப்பட்ட குற்றத்தை உணர்ந்து கையால் அணைத்து சத்தியம் செய்துள்ளான். இவ்விசாரணையை கோயில் அலுவலர்கள் முறிஎழுதி காவலர்மூலம் ஊரார்க்கு அனுப்பி வைத்தனர். இதனை 'முறிவைத்தல்' என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

## ௬௮. உடன்கட்டை ஏறுதல்

மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் இராசராச மலையகுலராயன் என்னும் சிற்றரசனுடைய மனைவி உடன்கட்டை ஏறியதாக கல்வெட்டு குறிப்பிடுகின்றது. அவள் உடன்கட்டை ஏறும்முன் தான் கணவனுக்குப்பின் உயிர் வாழ்வேன்னாயின் தன்னையொத்த சக்களத்தியாருக்கு அடிமையாவேன் என்றும், தன்னை தீப்பாய வேண்டாமென்று தடுப்பவர் தன் மனைவியை பிறருக்கு உரிமையாக்கும் பாவத்தை அடைவான் என்றும், தன்னை கட்டி தீயிலிட்டு தன் உயிர்போக செய்யாதவனும் அத்தகைய பாவத்தை அடைவான் என்றும் சூளுரைத்து உடன்கட்டை ஏறியதாக கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

## ௬௯. தளிச்சேரி பெண்டுகள்

முதலாம் இராசராசன் காலத்தில் ஆடுதல், பாடுதல் கலையில் சிறந்து விளங்கிய 402 தளிச்சேரி பெண்டுகள் சோழ நாட்டின் பல பகுதிகளில் இருந்து வரவழைக்கப்பட்டு பணியில் அமர்த்தப்பட்டார்கள். தஞ்சை பெருவுடையார் கோயிலின் வடபுறத்திலும், தென்புறத்திலும் இருவீதிகளாக அமைத்து 402 வீடுகளைக் கட்டி வீடுகளுக்கு எண்ணிட்டு, யார் யார் எந்த வீட்டில் வசிக்க வேண்டும் என முறைப்படுத்தப்பட்டுள்ளது. அவர்கள் கோயிலில் நிரந்தர ஊழியர்களாக தங்கி கலை நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளனர். அவர்களுக்கு மாத ஊதியமாக பெருவுடையார் கோயில் பண்டாரத்திலிருந்து நெல் வழங்கப்பட்டுள்ளது. வயது முதிர்வால் கலை நிகழ்ச்சிகளில் பங்கேர்க்க இயலாத தளிச்சேரிப் பெண்டுகள் தகுதி வாய்ந்த வேறு கலைஞர்களைத் தங்களுக்கு மாற்றாக நியமித்து தங்களின் நெல் ஊதியத்தைப் பெற்றுள்ளனர். கலைஞர்களின் உரிமை அவர்களின் வழித் தோன்றல்களுக்கு முறையாக வழங்கப்பட்டுள்ளது.

### 70. சோழர் நாணயங்கள்

சோழர் ஆட்சிக் காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களில் மன்னனின் இயற்பெயரோ, சிறப்புப் பெயரோ பொறிக்கப்பட்டு நாடு முழுவதும் வழக்கில் இருந்ததைக் கல்வெட்டுகளும், செப்பேடுகளும் உறுதி செய்கின்றன. காசுகள் பொன்னாலும், வெள்ளியாலும் செம்பாலும் வெளியிடப்பட்டன. "இராசராசன் மாடை", "இராசராசன் காசு" என்ற இருவகை காசுகள் வழக்கில் இருந்துள்ளது. மாடை என்பது ஒரு கழஞ்சு எடை கொண்டது. ஒரு மாடையின் மதிப்பு இரண்டு காசாகும். ஒரு காசு என்பது அரை கழஞ்சு எடை கொண்டதாகும்.

ஒரு மன்னனின் ஆட்சிக் காலத்தில் வெளியிடப்பட்டு அவன் ஆட்சியில் வழக்கில் இருந்த காசுகள் "அன்றாடு நற்காசு" என்று பெயர். அம்மன்னனுக்கு முன் ஆட்சி செய்த மன்னர்கள் வெளியிட்ட காசுகளும் வழக்கில் இருந்தன. அக்காசுகளுக்கு "பழங்காசு" என்று பெயர். இவற்றை "அன்றாடு நற்பழங்காசு" என்றும், "பழங்காசு நிறை இருபத்தைஞ்சு கழஞ்சு" என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. முதலாம் இராசராசனின் ஈழ வெற்றிக்குப் பிறகு "ஈழக்காசு" என்னும் பொற்காசு சோழநாட்டில் வழக்கில் இருந்துள்ளது. அக்காசு அரைக்கழஞ்சு எடையும் மாடையைப் போன்று மாற்றம் உடையதாக இருந்தது. இக்காசுகளை "ஈழக்கழஞ்சு நாற்ப்பதினால் பொன் 20 கழஞ்சு என்று கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

### 71. ஆவணங்களைப் புதுப்பித்தல்

கோயிலில் உள்ள கல்வெட்டுகள் அனைவருக்கும் பொதுவான சட்ட ஆவணங்களாகத் திகழ்ந்தன. அவற்றை தாம் விரும்பியவாறு ஒருவரோ இருவரோ மாற்றி அமைக்க முடியாது. அவற்றை திருத்தவும், புதுப்பிக்கவும் செய்யும் பணி கிராம மக்கள் முன்னிலையில் நிகழ்ந்துள்ளது. முதலாம் இராசராசனின்

நான்காம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 989) நித்தவினோத வளநாட்டில் முன்னியூர் என்னும் ஊரில் திருவகத்தீச்சுரம் உடையார் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு சிதைந்துவிட்டது. உள்ளூரிலும் ஊரின் புரத்திலும் அக்கோயிலுக்கு இறையிலியாக வழங்கப்பட்ட நிலங்களின் ஆவணமாக அக்கல்வெட்டு திகழ்ந்தது. ஊரார்களும் அக்கோயில் தானத்தார்களும் உதையப் பெருமாள் சோழக் கோனார் என்பவரிடம் விண்ணப்பித்தனர். அக்கோயில் திருமண்டபத்தின் முன்னர் ஊர் தண்டல் முதலானோர் கூடி இறையிலி நிலங்களை உறுதிப்படுத்தி ஒதுக்கி மீண்டும் பழையக் கல்வெட்டில் உள்ளபடியே புதுப்பித்து கல்லில் பொறித்தனர்.

## 72. தரப்பொத்தகம்

இன்றைய ஊர் வருவாய்க்கணக்குகளை "அ-பதிவேடு" என்ற பதிவேட்டில் வருவாய் அலுவலர்கள் பதிவுசெய்கின்றனர். அப்பதிவேட்டில் நிலங்களின் தரம், அளவு, வரிவிகிதம் போன்றவற்றைப் பதிவு செய்கின்றனர். இத்தகைய முறை பிற்கால சோழர் காலத்தில் இருந்துள்ளது. நிலங்களின் அளவு, தரம், வரிவிகிதம் போன்றவற்றை பதிவு செய்வதற்கு "தரப்பொத்தகம்" என்ற பதிவேடு பயன்படுத்தப்பட்டுள்ளது.

அவ்வப்பொழுது நிலங்கள் அளவிடப்பட்டு தரம் மதிப்பீடு செய்யப்பட்டது. நிலத்தின் தரத்திற்கேற்ப நிலவரி நிர்ணயம் செய்யப்பட்டது. அவற்றை "தரப்பொத்தகம்" என்ற பதிவேட்டில் பதிவு செய்தனர்.

## 73. ஆவணக்களரி (பதிவாளர் அலுவலகம்)

ஆவணம் என்பது உரிமைச்சீட்டாகும். களரி என்பது பதிவு செய்யுமிடமாகும். தற்பொழுது ஆவண உரிமைகளைப் பதிவு செய்யும் அலுவலகத்தைப் பதிவாளர் அலுவலகம் (Registrar Office) என்று அழைக்கின்றனர். சோழர் ஆட்சியில் நிலம், பணம், தங்கம் மற்றும் பிறபொருட்களின் பரிவர்த்தனைகள் அனைத்தும் ஆவணக்களரியில் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

"இக்காசு நாற்பத்தையாயிரமும் ஆவணக்களரியே காட்டி ஏற்றி கிழிகைச் செலவறக் கைக்கொண்டு" என்று கல்வெட்டுத் தொடர்கள் குறிக்கின்றன.

### 74. நான்குப் பெரும் கோயில்கள்

1. இராசராசேச்வரம் - தஞ்சாவூர் - முதலாம் இராசராசன்
2. கங்கைகொண்ட சோழீஸ்வரம் - கங்கைகொண்ட சோழபுரம் - முதலாம் இராசேந்திரன்
3. இராசராசீஸ்வரம் - தாராசுரம் - இரண்டாம் இராசராசன்
4. திரிபுவனவீரேஸ்வரம் - திருபுவனம் - மூன்றாம் குலோத்துங்கன்

### 75. மூவர் கோயில்

கொடும்பாளூர் இருக்கு வேளிர் மன்னன், பூதிவிக்கிரமகேசரி தன் பெயராலும், தன் இரு மனைவியர் கற்றளி, வரகுணநங்கை ஆகியோரது பெயராலும் மூன்று கோயில்களை ஒரே மதிலுக்குள் எடுப்பித்தான். இம்மூவர் கோயில்கள் மதுரை - திருச்சி சாலையில் விராலிமலையை அடுத்துள்ளன. இவன் சுந்தரசோழனது (கி.பி. 957 - கி.பி. 975) சிற்றரசன்.

### 76. இரட்டைக் கோயில்கள்

கல்லக்குடிக்கருகிலுள்ள (டால்மியாபுரம்) மேலப்பழுவூரில் சோழர்களின் சிற்றரசர்களாக விளங்கிய பழுவேட்டரையர்கள் ஒரே மதிலுக்குள் இரண்டு கற்கோயில்களை எடுப்பித்துள்ளனர். இவை "இரட்டைக் கோயில்கள்" எனப்படும், கல்வெட்டுகளில், ஒன்று "வடவாயில் ஸ்ரீகோயில்" என்றும், மற்றொன்று "தென்வாயில் ஸ்ரீகோயில் என்றும் அழைக்கப்படுகின்றன. சுவர்த் தெய்வங்கள் ஒன்றில் அமர்ந்த நிலையிலும், மற்றொன்றில் நின்ற நிலையிலும் காணப்படுகின்றன. இக்கோயில்கள் பராந்தக சோழன் காலத்தில் (கி.பி. 907 - கி.பி. 954) கட்டப்பட்டவையாகும்.

## 77. தேவரடியார் நகர்

இராசராசன், பெரிய கோயிலில் நாட்டியமாட சோழ நாட்டுக் கோயில்களிலிருந்தெல்லாம் நாட்டிய மகளிரைத் தேர்வு செய்து பணியில் அமர்த்தினான். அவர்களுக்கு வீடுகள் வழங்கினான். இக்குடியிருப்பு 'தளிச்சேரி' எனப்பட்டது. இது கோயிலின் தென்புறத்திலும், வடபுறத்திலும் இரு தெருக்களாக இருந்தது. ஒவ்வொரு தெருவிலும் இரண்டு வரிசையாக(சிறகு) 402 வீடுகள் இருந்தன. இப்பெண்கள் 'தளிச்சேரிப் பெண்டுகள்' எனப்பட்டனர். ஒவ்வொருவர் பெயரிலும் நக்கன் என்ற அடைமொழி இருந்தது.

## 78. முத்துக்களால் இறை வழிபாடு

இராசராசன், தஞ்சைப் பெரிய கோயில் இறைவனுக்குத் தண்ணீரைக் கொட்டுவதுபோல, முத்துக்களை கொட்டி வழிப்பட்டான். அவை சத்யாசிரயனையும், பாண்டியரையும், சேரரையும் வெற்றிக்கண்டு, கொண்டவை. இலட்சக்கணக்கான முத்துக்களாக அவை இருந்தபோதிலும் ஒவ்வொன்றும் தரம், குணம், எடை, கணக்கிடப்பட்டு பதிவு செய்யப்பட்டது. அவற்றின் வகைகளைப் பாருங்கள்.

| | | |
|---|---|---|
| வட்டம் | ஒப்புமுத்து | நிப்பொளம் |
| அனுவட்டம் | குறுமுத்து | பயிட்டம் |
| அம்பு | இரட்டை | சிவந்தநீர் |
| முதுங்கறடு | சப்பத்தி | குளிர்ந்தநீர் |

## 79. இறைவனை அளவீடு செய்யலாமா?

அளவீடு செய்யலாம். இராசராசன் கொடுத்த செப்புத் திருமேனிகள் ஒவ்வொன்றும் அளக்கப்பட்டு, கல்வெட்டுகளில் பதிவு செய்யப்பட்டன. இதோ கல்வெட்டு :

"பாதாதி கேசாந்தம் இருபதிற்று விரலேய்
ஐந்து தோரை உசரத்து நாலு ஸ்ரீஹஸ்தம்
உடையாராகக் கனமாக எழுந்தருளிவித்த
சுப்ரமணிய தேவர் திருமெனி ஒருவர்".

"பர்வதத்திற்குமேல் கேசாந்தத்தளவுஞ்
செல்லப் பதினென் விரல் உசரத்து
நாலு ஸ்ரீஹஸ்தம் உடையவராகக்
கனமாக எழுந்தருளிவித்த தக்ஷிணா
மூர்த்திகள் ஒருவர்".

## 80. சோழர் கால உறவு முறைகள்

| | | |
|---|---|---|
| அம்மா | : | மாதா, தாய், அம்மை, அன்னை, தங்களாச்சி, திருவயிறு வாய்த்தவள். |
| அப்பா | : | பிதா, அப்பன், தந்தை, தமப்பன், தகப்பன், எமப்பன். |
| மனைவி | : | மனைவி, மணாட்டி, பத்தினி, மணவாட்டி பெண்டுகள், உடையாள், அகமுடையாள். |
| கணவன் | : | அகமுடையான், கொழுநன், மணவாளன், தன்னை உடையான். |
| சகோதரன், சகோதரிகள் | : | உடன்பிறந்தான், உடன்பிறந்தாள், முன்பிறந்தான், முன்பிறந்தாள், அக்கன், தம்பி, அனுஜன், தமையன். |
| குழந்தைகள் | : | மகன், மகனார், பிள்ளை, பிள்ளையார். மகள். மகளார், புத்திரன் புத்திரி. |
| அரசியர் | : | அரசியார், தேவியார், பிராட்டியார், முழுதுமுடையார். |
| காமக்கழத்தி | : | போகியார் |




| | | |
|---|---|---|
| வளர்ப்புத்தாய் | : | தாதியார் |
| அந்தணர் மனைவி | : | சானி, பிராம்மணி, பாரியை. |

## 81. சோழர் காலக் கால்நடைகளின் மதிப்பு

ஆடு, மாடு, எருமை

| | | |
|---|---|---|
| 3 காசுக்கு | - | ஒரு ஆடு |
| இரண்டு ஆடு | - | 1 பசு |
| 3 பசு | - | 1 எருமை |

## 82. ஆடு, பசு, எருமை கொடை

திருவிளக்கிற்கான நெய்க்காக ஆடு, பசு, எருமை, முதலியவைகளைக் கொடுப்பது சோழர் கால வழக்கம். தஞ்சைக் கோயிலில் விளக்கிற்கு இவை கொடுக்கப்பட்டன. கல்வெட்டு வரிகளில் இதைக் காண்போம்.

> "திருவிளக்கு ஒன்றினுக்கு ஆடு தொண்ணூற்றாறாகவும், பசு நாற்பத்தெட்டாகவும் எருமை பதினாறாகவும்"

> "பசுவின் கன்றும், எருதும் பசு சார்த்திக் கொடுத்தன பசுவாகவும், ஆட்டுக்குட்டியும் கிடாயும் ஆடு சார்த்திக் கொடுத்தன ஆடாகவும். எருமைக் கன்றும், கிடாவும், எருமை சார்த்திக் கொடுத்தன எருமையாகவும்".

> "காசு ஐஞ்சினால் ஆடு பதினைஞ்சும்"

## 83. சோழர் கால முகத்தல் வாய்ப்பாடு

| | | |
|---|---|---|
| 360 நெல் | - | 1 செவிடு |
| 5 செவிடு | - | 1 ஆழாக்கு |

| | | |
|---|---|---|
| 2 ஆழாக்கு | - | 1 உழக்கு |
| 2 உழக்கு | - | 1 உரி (½ நாழி) |
| 16 உரி | - | 1 மரக்கால் (குறுணி) |
| 2 மரக்கால் | - | 1 பதக்கு |
| 2 பதக்கு | - | 1 தூணி |
| 3 தூணி | - | 1 கலம் |

**சோழர் கால நிறுத்தல் வாய்ப்பாடு**

| | | |
|---|---|---|
| 2 குன்றிமணி | - | 1 மஞ்சாடி |
| 10 மஞ்சாடி | - | 1 கழஞ்சு |
| 16 கழஞ்சு | - | 1 பலம் |

**நீட்டல் `அளவை**

| | | |
|---|---|---|
| 8 தோரை | - | 1 விரல் |
| 24 விரல் | - | 1 முழம் |

இது தவிர சாண், அடி(காலடி) ஆகியவற்றாலான 16 சாண் கோல், 12 அடிக்கோல், 16 அடிக்கோல் போன்றவைகளும் இருந்தன. இராசராசன் காலக்கோலுக்கு 'உலகளந்த கோல்' என்ற பெயரும் இருந்தது. ஒரு கோலால் ஏற்படும் சதுரம் ஒரு குழி எனப்பட்டது. நூறு குழி ஒருமா, இரண்டாயிரம் குழி ஒரு நிலம் என்று நிலங்கள் அளக்கப்பட்டன.

**நில அளவு வாய்ப்பாடு**

| | | |
|---|---|---|
| முந்திரி | - | 1/320 |
| 2 முந்திரி | - | அரைக்காணி(1/160) |
| 2 அரைக்காணி | - | 1 காணி(1/80) |
| 4 காணி | - | 1 மா(1/20) |
| 20 மா | - | 1 நிலம் |

| | | |
|---|---|---|
| 4 முந்திரி | - | 1 காணி(1/80) |
| 5 காணி | - | 1 மாகாணி [வீசம்(1/16)] |
| 2 வீசம் | - | கால் (1/4) |
| 16 வீசம் | - | ஒன்று |

## 84. சோழர் காலக் கல்வெட்டுகளில் மாதம் குறிப்பிடும் முறை

| | | |
|---|---|---|
| சித்திரை | - | மேஷ ஞாயிறு |
| வைகாசி | - | ரிஷப ஞாயிறு |
| ஆனி | - | மிதுன ஞாயிறு |
| ஆடி | - | கடக ஞாயிறு |
| ஆவணி | - | சிம்ம ஞாயிறு |
| புரட்டாசி | - | கன்னி ஞாயிறு |
| ஐப்பசி | - | துலா ஞாயிறு |
| கார்த்திகை | - | விருச்சிக ஞாயிறு |
| மார்கழி | - | தனு ஞாயிறு |
| தை | - | மகர ஞாயிறு |
| மாசி | - | கும்ப ஞாயிறு |
| பங்குனி | - | மீன ஞாயிறு |

## 85. சோழர்களைக் குறிப்பிடும் முதற்கல்வெட்டு

அசோகன் கல்வெட்டு. அகில இந்தியாவையும் ஆட்சி செய்த அசோகனின் கீழ்ப்படாத அண்டை நாடுகளாக விளங்கிய நாடுகளில் ஒன்று சோழநாடு. அவனது கல்வெட்டு சோழர்களைச் **'சோட'** என்று குறிப்பிடுகிறது. காலம் கி.மு. 3-ஆம் நூற்றாண்டு.

## 86. சோழர் காலக் கோயில் பணியாளர்கள்

ஸ்ரீகாரியம்
திருவாராதனை செய்வார்
பரிசாரகர்
பண்டாரி
விளக்குடையார்
நீர்த்தெளியான்
சன்னாலியள்
மடைப்பள்ளிக் குசவர்

| | |
|---|---|
| கணக்கெழுதுவார் | வண்ணத்தார் |
| கீழ்க்கணக்கு எழுதுவார் | நாவிசம் |
| மெய்க்காவல் | கோலினமை |
| திருப்பதியம் விண்ணப்பிப்பார் | தய்யான் |
| தளிச்சேரிப்பெண்டு | அம்பட்டன் |
| நட்டுவம் செய்வார் | ரத்நத்தய்யான் |
| கானபாடி | கன்னான் |
| வங்கியம் | தச்சு |
| பாடவியம் | தச்சாசார்யம் |
| உடுக்கை வாசிப்பார் | தட்டான் |
| வீணை வாசிப்பார் | கண்காணி |
| ஆரியம் பாடுவார் | நந்தவனக்குடிகள் |
| தமிழ் பாடுவார் | காந்தர்வர் |
| கொட்டிமத்தளம் | திருவாய்க் கேள்வி |
| முத்திரைச் சங்கு | நாயகஞ் செய்வார் |
| பக்கவாத்தியர் | உவைச்சு |

### 87. சோழர் காலத்து அணிகலன்கள்

| | |
|---|---|
| திருப்பட்டம் | முத்தின் உழுத்து |
| பொற்பூ | வயிர உழுத்து |
| அஞ்சடுத்து விளக்கின | ரத்ந மோதிரம் |
| திரள் மணிவடம் | நவரத்ந மோதிரம் |
| திருக்கைக்காறை | சொனகச்சிடுக்கின்கூடு |
| திருவடிக்காறை | பிருஷ்டகண்டிகை |
| திருப்பட்டிகை | திருவடி நிலை |
| முத்து வளையல் | கும்பத்தகடு |
| திருமுடி | திருக்கொள்கை |
| திருமாலை | கொம்பிற் கொள்கை |
| ஸ்ரீசந்தம் | திருநயநம் |
| கண்டநாண் | மத்தகத்தகடு |

| | |
|---|---|
| புல்லிகை கண்டநாண் | திரிசரம் |
| பாசமாலை | பஞ்சசரம் |
| மாணிக்கத்தாலி | ரத்ந வளையல் |
| ஸ்ரீபாஹு"வலயம் | ரத்ந கடகம் |
| பதக்கம் | பட்டிகைநாண் பவழக்கடகம் |

## 88. சோழர் காலத்துப் பரிகலன்கள்

| | |
|---|---|
| மண்டை | இலைச்செப்பு |
| கெண்டி | கலசப்பானை |
| தட்டம் | தாரைத்தாள் வட்டில் |
| குடம் | கொடி |
| கிடாரம் | ஈச்சொப்பிகை |
| ஒட்டுவட்டில் | காளம் |
| வட்டில் | குழல் |
| கலசம் | கங்கில் |
| படிக்கம் | பள்ளித்தொங்கல் |
| குறுமடல் | தவளச்சத்ரம் |
| காளாஞ்சி | இலைத்தட்டு |
| கற்கண்டிகை | |

## 89. விமானத்தில் ஐரோப்பியர் உருவம் ஏன்?

தஞ்சை விமானத்தில் வடபுறம் ஓர் ஐரோப்பியரது உருவச் சிற்பம் உள்ளது. இது சுதையாலானது. இராசராசன் காலத்தில் ஐரோப்பியர் எப்படி வந்தனர் என்று தோன்றுகிறதல்லவா? இது இராசராசன் காலத்தியதல்ல. நாயக்க மன்னர்கள் காலத்தியது. தஞ்சை மன்னன் இரகுநாத நாயக்கன் தரங்கம்பாடியில் ஹாலந்து நாட்டினருக்கு கம்பெனி அமைக்க அனுமதி அளித்தான். அதன் பிறகு தஞ்சைப் பகுதிகளில் ஐரோப்பியர் நடமாட்டம் சாதாரணமாகியது. அவர்களது 'வினோதமான' உருவத்தைக்

கண்டு மகிழ்ந்த சிற்பிகள் தங்கள் கலைப்பணியில் அவர்களது உருவங்களைச் சேர்த்துக் கொண்டனர்.

### 90. ஐரோப்பியர் உருவங்கள் வேறெங்கும் உண்டா?

உண்டு! குடந்தை இராமசாமி கோயில், ஸ்ரீரங்கம் குதிரை மண்டபம் ஆகியவற்றின் தூண் சிற்பங்களில் தொப்பி, ஷு, கோட் அணிந்த உருவங்கள் சிற்பங்களாக உள்ளன. இராமநாதபுரம் சேதுபதிகள் ஓவியத்தில், பரிசுகளுடன் வந்த ஐரோப்பியர் சேதுபதிக்கு தொப்பியைக் கழட்டி மரியாதை செய்யும் காட்சி உள்ளது.

### 91. பொன்னை தரம் பார்ததல்

1. பொன்னின் மாற்றுக் காண்பதற்கு பருங்கல்லில் உரைக்கக் கூடாது.
2. உரைக்கல்லில் ஒட்டிய பொன்னைத் தினமும் மெழுகு ஒற்றி எடுக்க வேண்டும்.
3. அந்த மெழுகைத் தினமும் வாரியப் பெருமக்களிடம் கொடுத்துவிட வேண்டும்.
4. மூன்று மாதத்திற்கு ஒருமுறை சபையார் முன்னிலையில் கீழ்கண்ட உறுதிமொழி சொல்ல வேண்டும்.

**''எங்களூற்றது நாங்களெடுத்ததனை சிலாலேகைப்படி பிழைக்க எடுத்தோமாயில் பசித்து வாழ்வோம்''.**

இப்படி ஊர்ச்சபைக்கு வரியாக வரும் பொன்னின் தரம் (மாற்று, காரட்) பார்த்து வசூலிப்பவர்களுக்கு நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருந்தன.

### 92. பொன்னை தரம் பார்க்கும் குடவோலை தேர்தல்

மாற்றுப் பார்ப்பவர்கள் 8 பேர், ஊரிலிருந்து குடவோலை முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாடவீதியில் உள்ளவர்கள் ஒன்றுகூடிக் குடவோலை முறைப்படித் தங்களில் 4 பேரையும். சேனையைச் சேர்ந்தவர்கள் ஒன்றுகூடி தங்களில்

குடவோலைமுறைப்படி 2 பேரையும், எண்ணெய் ஆட்டும் சங்கரப் பாடியார்கள் ஒன்றுகூடித் தங்களில் 2 பேரையுமாக 8 பேர் தேர்வு செய்யப்பட்டனர்.

இந்தக் குடவோலைமுறை எங்கிருந்து வந்தது தெரியுமா? குடவோலைத் தேர்வுக்குப் பெயர்போன உத்திரமேரூரிலிருந்து தான். இந்த முடிவு கி.பி. 922இல் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டு இன்றும் உள்ளது.

## 93. குடவோலைத் தேர்தலில் நிற்கத் தகுதியுள்ளவர்கள்

உத்திரமேரூர் பிராமணர்சபையில் வாரியப்பணிக்கான தேர்தல் கி.பி.921இல் குடவோலை முறையில் நடந்தது. அதற்குத் தகுதியுடையவர்கள்.

1. 35-70 வயதுடையோர்.
2. வரிகட்டும் நிலம் ½ நிலம் (10 மா) உடையோரில் மந்த்ர பிராமணம் அறிந்தவர்.
3. வரிகட்டும் நிலம் 1/8 என்றாலும் 4 வேதத்தில் 1 வேதமும், 4 வேதபாஷ்யங்களில் (உரை) ஒன்றும் தெரிந்தவர்.
4. கார்யத்தில் நிபுணர்.
5. ஆசாரமுடையவர்
6. செல்வமும், நற்குணமும் உடையவர்.
7. 3 ஆண்டுகளுக்குள் வாரியப்பணி புரியாதவர்.

## 94. குடவோலைத் தேர்தலில் நிற்கத் தகுதியில்லாதவர்கள்

1. வாரியப்பணி செய்து கணக்குக் காட்டாதவர்.
2. மகாபாவம் 5இல் முதல் 4 பாவம் செய்தவர்.
3. மேற்சொன்ன இருவருடைய உறவினர்களான

| | |
|---|---|
| சின்னம்மா | சகோதரர் |
| பெரியம்மா | மாமனார் |
| அத்தை மாமன் | மைத்துனன் |
| தாய் மாமன் | சகோதரி |

| | |
|---|---|
| சித்தப்பா | சகோதரி கணவன் |
| பெரியப்பா | சகோதரி மக்கள் |
| அப்பா | மருமகன் |
| மகன் | மாமன் மக்கள் ஆகியோர் |

4. பிறர் பொருளை அபகரித்தவர்
5. கையூட்டுப் பெற்றவர்
6. தவறுகளுக்கு பரிஹாரம் செய்து நல்லவரானார்.

## ௯5. சோழர் காலத்தில் தண்ணீர்ப் பந்தல்

சோழர் காலத்தில் பெருவழிகள் பல இருந்தன. இவ்வழிகளில் களைப்பாறுவர்களுக்காகத் தண்ணீர்ப் பந்தல்கள் அமைக்கப்பட்டன. இவ்வித தண்ணீர் பந்தல்கள் திருச்செந்துறை, திருப்பாலத்துறை, செந்தலை, குமரிக்கழிக்குடி, உக்கல் ஆகிய ஊர்களில் இருந்தன. இரவிலும் பணிபுரிய பணிமக்களும், விளக்குகளும் கொடையாகக் கொடுக்கப்பட்டன. சில தண்ணீர் பந்தல்களின் பெயர்கள்

'ஜெயங்கொண்ட சோழன் தண்ணீர் பந்தல்'
'இராசராசன் தண்ணீர்ப்பந்தல்'
'சாலைக்கிணறு தண்ணீர் பந்தல்'

## ௯6. தஞ்சாவூர் புறம்படியில் இருந்த பெருந்தெருக்களும், தெருக்களும்

**பெருந்தெருக்கள் :**

1. இராஜவித்யாதரப் பெருந்தெரு
2. வீர சோழப் பெருந்தெரு
3. ஜயங்கொண்ட சோழப் பெருந்தெரு.
4. சூரசிகாமணி பெருந்தெரு

**தெருக்கள் :**

1. கந்தர்வத் தெரு
2. மடைப்பள்ளித் தெரு

3. வில்லிகள் தெரு
4. ஆனை ஆட்கள் தெரு
5. ஆனைக் கழுவார் தெரு
6. பன்மையார் தெரு

**தஞ்சாவூர் உள்ளாலையிலிருந்த தெருக்களும், குடியிருக்கைகளும்**

1. சாலியத் தெரு.
2. பாண்டி வேளம்.

## 97. இராசராசன் கால அங்காடிகள்

1. கொங்கவாளார் அங்காடி
2. இராஜராஜ பிரும்ம மஹாராஜந் அங்காடி

**இராசராசன் கால பேரங்காடி**

1. திரிபுவன மாதேவிப் பேரங்காடி

**இராசராசன் கால வேளம்**

1. உத்தமசீலியார் வேளம்.
2. அபிமாந பூஷணத் தெரிந்த வேளம்.
3. உய்யக்கொண்டார் தெரிஞ்ச திருமஞ்சனத்தார் வேளம்.
4. இராஜராஜத்தெரிந்த பாண்டித் திருமஞ்சனத்தார் வேளம்.
5. அருமொழிதேவத் தெரிந்த திருப்பரிகலத்தார் வேளம்.

**இராராசன் கால படைவீடு பிற**

1. சிவதாஸன் சோலையான இராஜராஜ பிரம்ம மஹாராஜந் படைவீடு.
2. ரௌத்தர மஹா காளத்து மடவிளாகம்.
3. பிரம குட்டம்.

## 98. அதிகாரிச்சிகள்

சோழர் காலத்தில் பெண் அதிகாரிகள் இருந்தனர். இராசராசன் காலத்தில் அவன் பட்டத்தரசி ஒலோக மாதேவி

ஆணையை நிறைவேற்ற 'எருதந் குஞ்சரமல்லி' என்பவள் இருந்தாள். இரண்டாம் இராசேந்திரன் காலத்தில் 'அதிகாரிச்சி முத்தான பொன்நங்கை' என்பவள் இருந்தாள்.

**முதலாம் இராசராசன் அதிகாரிகள்**

| | | |
|---|---|---|
| மகாதண்டநாயகன் | : | பஞ்சவன்மாராயன். (முதல் இராசேந்திர சோழன்) |
| சேனாபதிகள் | : | 1. கிருட்டிணன் இராமனான மும்முடிச் சோழ பிரம்மராயன். |
| | | 2. குரவன் உலகளந்தானான இராசராசமாராயன் |
| படைத்தலைவர்கள் | : | 1. பரமன் மழபாடியான மும்முடிச் சோழன் |
| | | 2. கம்பன் மணியான விக்கிரமசிங்க மூவேந்த வேளான் |
| | | 3. நல்லூர் கிழவன் தாழிகுமரன். |
| பெருந்தர அதிகாரிகள் | : | 1. ஈராயிரவன் பல்லவரையானான மும்முடிச்சோழ பேரரையன் |
| | | 2. நம்பன் கூத்தாடியான ஜெயங் கொண்ட பிரம்மமகாராஜன். |
| | | 3. வாயலூர் கிழவன் திருமலை வெண்காடன், |
| | | 4. உத்தரங்குடையான்கோன் வீதிவிடங்கனான வில்லவன் மூவேந்தவேளான் |
| | | 5. கண்டாச்சன் பட்டாடலகனான நித்தவிநோத விழுப்பரையன், |
| | | 6. காளன் கண்யப்பனான இராஜகேசரி மூவேந்தவேளான், |
| | | 7. நித்தி விநோத வளநாட்டு மகாராசன், |

8. அருமொழியான கரிகால கர்ணப் பல்லவரையன்,
9. அமுதன் தேவனான இராச வித்யாதர விழுப்பரையன்,
10. கோன்குற்றியான இராசவித்யாதர விழுப்பரையன்,
11. உலோகமாராயன்,
12. அம்பலவன் கண்டராதித்தன், உத்திரமந்திரி, தங்கி ஆரூரன்.

ஓலைநாயகன் : வேளான் உத்தம சோழானாகிய மதுராந்தக மூவேந்தவேளாண்

திருமந்திர ஓலை : 1. விளத்தூர் கிழவன் அமுதன் தீர்த்தங்கரன்,
2. இராசகேசரி நல்லூர் கிழவன் காறாயில் எடுத்தபாதம்.

ஸ்ரீகாரிய ஆராய்ச்சி : மதுராந்தகன் கண்டராதித்தன்.

நடுவிருக்கை : கோட்டையூர் பட்டன் பூவந்தனார்.

## 99. முதலாம் இராசராசன் பெயர் பெற்ற ஊர்கள்

| | |
|---|---|
| தெலுங்குகுலகாலபுரம் | : நார்த்தாமலை |
| இராசராசபேரளமான மணக்கானம் | : மரக்காணம் |
| ஜனநாதச்சதுர்வேதிமங்கலம் | : அகரம் |
| ஜனநாதபுரம் | : மாமல்லை |
| இராசராச சதுர்வேதிமங்கலம் | : பிரமதேசம்<br>எண்ணாயிரம்<br>தாதாபுரம் |
| உய்யக்கொண்ட சோழபுரம் | : சோழபுரம் |
| செயங்கொண்ட சோழபுரம் | : சோழபுரம் |
| இராசாசீரயபுரம் | : மேல்பாடி |
| நிகரிலிச் சோழச் சதுர்வேதிமங்கலம் | : சேரன்மாதேவி |

| | | |
|---|---|---|
| சனநாதச் சதுர்வேதிமங்கலம் | : | பிரம்மதேசம் |
| இராசராசச் சதுர்வேதிமங்கலம் | : | மன்னார்கோயில் திருவாலீஸ்வரம் |
| இராசராசபுரம் | : | மாதோட்டம்(இலங்கை) |
| ஜனநாதமங்கலம் | : | பொலனருவா (இலங்கை) |
| ஜனநாதபுரம் | : | நடி மாளிகை(கர்நாடகம்) |
| நிகரிலிச் சோழபுரம் | : | மாலூர்(கர்நாடகம்) |

## மன்னர்களின் பெயர்களைக் கொண்ட ஊர்கள்

வரலாற்றில் ஊர்களுக்கு மன்னனின் பெயரோ, விருதுப்பெயரோ சூட்டப்பட்டு வழக்கில் இருந்துள்ளது. காலப்போக்கில் சில வழக்கிலிருந்தும், சில அதே பெயரிலும், சில திரிந்தும் வழங்கலாயிற்று. அவற்றுள் சில:-

1. தலைநகரான ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதிமங்கலம் - தலைஞாயிறு
2. திரைலோக்கியான விருதராஜ பயங்கர சதுர்வேதிமங்கலம் - திரைலோக்கி
3. தோவாளையான எதிர்வல்லி சோழபுரம் - தோவாளை
4. குமரியான கங்கைகொண்ட சோழபுரம் - கன்னியாகுமரி
5. உத்திரமேரூரான இராசேந்திர சோழ சதுர்வேதிமங்கலம் - உத்திரமேரூர்
6. பாம்புரமான குலோத்துங்க சோழ சதுர்வேதிமங்கலம் - திருப்பாம்பரம்
7. பாவாடைக்குடியான நித்தவினோதநல்லூர் - பாவாட்டக்குடி
8. ஒட்டைக்குடியான எதிரிலி சோழபுரம் - ஒட்டக்குடி

9. கோவன்புத்தூரான
வீரகேரளநல்லூர் - கோயம்புத்தூர்
10. பூச்சிப்பாக்கமான ஸ்ரீபராந்தக
நல்லூர் - பூசிவாக்கம்
11. திரையனேரியான உத்தமசோழ
சதுர்வேதிமங்கலம் - திரையநேரி
12. மாமல்லபுரமான ஜனநாதபுரம் - மாமல்லபுரம்
13. கருந்திட்டைக்குடியான சுங்கம்
தவிர்த்த சோழநல்லூர் - கருந்தட்டாங்குடி
14. சடங்கன்பாடியான
குலசேகரன் பட்டினம் - தரங்கம்பாடி
15. மாறப்படுகையான அழகிய
சோழ சதுர்வேதிமங்கலம் - மாம்படுகை
16. ஆணைமேலகரமான நவரீஸ்வர
சதுர்வேதிமங்கலம் - ஆணைமேலகரம்
17. கோமலான குலோத்துங்க
சோழ சதுர்வேதிமங்கலம் - கோமல்
18. மேற்கிள்ளிமங்கலமான கரிகாலச்
சோழ சதுர்வேதிமங்கல்ம் - மேக்கிரிமங்கலம்
19. பறியலூரான இராஜநாராயண
சதுர்வேதிமங்கலம் - பரசலூர்
20. விளைநகரான நித்தவிநோத
சதுர்வேதிமங்கலம் - விளைநகர்
21. ஆக்கூரான இராசேந்திரசிம்ம
சதுர்வேதிமங்கலம் - ஆத்தூர்
22. நாங்கூரான ஸ்ரீபாததூளி
சதுர்வேதிமங்கலம் - நாங்கூர்
23. மணற்குடியான உத்தமச்சோழ
சதுர்வேதிமங்கலம் - மணக்குடி

24. நீடுரான இராஜசிகாமணி
சதுர்வேதிமங்கலம் - நீடூர்
25. வில்லியநல்லூரான புவலோக
மாணிக்க சதுர்வேதிமங்கலம் - வில்லியனூர்
26. முருகவேள்மங்கலமான
கங்கைகொண்ட சோழபுரம் - முருகமங்கலம்
27. குறுக்கையான விக்கிரம சோழ
சதுர்வேதிமங்கலம் - கொறுக்கை
28. கஞ்சனூரான சிம்மவிஷ்ணு
சதுர்வேதிமங்கலம் - கஞ்சனூர்
29. வேம்பற்றூர்ஆன எதிரிலிசோழ
சதுர்வேதிமங்கலம் - வெம்பற்றூர்
30. பொள்ளாட்சியான முடித்தலைக்
கொண்ட சோழநல்லூர் - பொள்ளாச்சி
31. திருநெல்வேலியான குலசேகர
சதுர்வேதிமங்கலம் - திருநெல்வேலி
32. உக்கலான விக்கிரமச்சோழ
சதுர்வேதிமங்கலம் - உக்கல்
33. திருநாவலூரான
இராசாதித்தியபுரம் - திருநாமநல்லூர்
34. கருவூரான முடிவழங்கு
சோழபுரம் - கரூர்
35. மாத்தூரான வீரபாண்டியபுரம் - மாத்தூர்
36. மணமேல்குடியான
குலோத்துங்க சோழப்பட்டினம் - மணமேல்குடி
37. வாகூரான அழகிய சோழ
சதுர்வேதிமங்கலம் - பாகூர்
38. நெற்குன்றமான வைரமேக
சதுர்வேதிமங்கலம் - நெற்குன்னம்
39. விழுப்புரமான ஜனநாத
சதுர்வேதிமங்கலம் - விழுப்புரம்

| | | |
|---|---|---|
| 40. உறுமூரான விக்கிரமசோழ சதுர்வேதிமங்கலம் | - | எறும்பூர் |
| 41. பெரும்பாக்கமான வீரராஜேந்திர சதுர்வேதிமங்கலம் | - | பெரும்பாக்கம் |
| 42. திருவக்கரையான திரிபுவன மாதேவி சதுர்வேதிமங்கலம் | - | திருவக்கரை |
| 43. மழவராயநல்லூரான பராக்கிரம பாண்டியபுரம் | - | மழவராயநல்லூர் |
| 44. கூகூரான குலோத்துங்கச் சோழ நல்லூர் | - | கூகூர் |
| 45. களப்பாலான முடிவழங்கு சதுர்வேதிமங்கலம் | - | களப்பால் |
| 46. ஆலம்பாக்கமான மதுராந்தக சதுர்வேதிமங்கலம் | - | ஆலம்பாக்கம் |
| 47. கருகாவூரான இராஜநாராயண சதுர்வேதிமங்கலம் | - | திருக்கருகாவூர் |
| 48. மணலூரான கல்யாணமகாதேவி சதுர்வேதிமங்கலம் | - | மணலூர்பேட்டை |
| 49. திருமுட்டமான முடிகொண்ட சோழநல்லூர் | - | ஸ்ரீமுஷ்னம் |
| 50. பூவனூரான அவனிசேகர சதுர்வேதிமங்கலம் | - | பூவனூர் |
| 51. கீழ்பூண்டியான லோகமாதேவி சதுர்வேதிமங்கலம் | - | நாவல்பூண்டி |
| 52. வைகலான வானவன்மாதேவி சதுர்வேதிமங்கலம் | - | வைகல் |
| 53. சண்பையான வீரராசேந்திர சோழபுரம் | - | ஜம்பை |
| 54. திருக்கழுக்குன்றமான உலகளந்த சோழபுரம் | - | திருக்கழுக்குன்றம் |

## 100. இராசராசன் காலத்து தளிச்சேரி பெண்டுகளின் பெயர்கள்

1. அதிமானி
2. அபையத்தாள்
3. அம்மாறி
4. அரவம்
5. அறநெறி
6. அறிவாட்டி
7. அனவரத சுந்தரி
8. ஆடல்அழகி
9. ஆராவமுது
10. ஆருயிர்
11. ஆவிபெற்றதிரு
12. ஆராயிரம்
13. இளங்கா
14. இன்னிளவஞ்சி
15. உத்தமதானி
16. ஊதாரி
17. எடுத்தபாதம்
18. கல்லறை
19. கற்பக மாணிக்கம்
20. கற்பக தானி
21. காமக்கொடி
22. காமி
23. காமுத்திரி
24. காறாயில்
25. குஞ்சரமல்லி
26. குடிதாங்கி
27. கூத்தாடி
28. சதுரி
29. சித்திரவல்லி
30. சீருடையாள்
31. சீலசூளாமணி
32. சோதிவிளக்கு
33. தரணி
34. வராகி
35. திகைச்சுடர்
36. தில்லையழகி
37. தில்லைக்கூத்தி
38. தில்லைநிறைந்தாள்
39. திருப்பூவணி
40. திருவழகி
41. திட்டைச்சேரி
42. தூதுவி
43. நங்கூறி
44. நயனவல்லி
45. நிச்சல்குப்பை
46. பரமி
47. பரவை
48. பிச்சி
49. புகழி
50. பூங்காவி
51. பொற்கேசி
52. பொற்காவி
53. மதனவல்லி
54. மழலைச்சிலம்பு
55. மானாபரணி
56. மீனவன்மாதேவி
57. வழுவாநிலை
58. வீதிவிடங்கி
59. வீராணி
60. வீரசோழி
61. வெம்பி

**இராசராசன் காலத்து தளிச்சேரி ஆடவர் பெயர்கள்**

ஆவணி ஆளப் பிறந்தான்
அஞ்சாத பெருமாள்
அமுத பண்டிதப் பிரியன்
அமுத வளக்கோன் குன்றன்
அறமுடையான்
உய்ய வந்தான்
எடுத்தகையழகியான்
காக்கு நாயகதேவன்
குடிதாங்கி பட்டன்
செங்கனி வாயன்
சலமிக் கண்டன்
தனிநின்று வென்றான்
தாழிகாக்கு நாயகன்
நீருணி இளையான்
பாவந்தீர்த்தான்
பல கண்ணன் தழுவக் குழைந்தான்
பொய்யிலா மெய்யன்
மெய்யாபரணி
வழியடிமை கொண்டான்
வேண்ட வளத்தக்கோன்
விழியூருடையான்

**சோழர் கால அளவு பெயர்கள்**

அருமொழித் தேவன் மரக்கால்
அதிகை நாயகன் மரக்கால்
அருநாழிக்கால்

அரியென்ன வல்லான மரக்கால்
இராசகேசரி என்னும் மரக்கால்
இராசேந்திரசிங்கன் மரக்கால்
கவரா மொழி மரக்கால்
திருமூலன் மரக்கால்
நாராயணன் கால்
சோம நாதன் மரக்கால்
இராசராசன் காசுக்கல்
பாச்சிக்கல்
காடவராயன் குடிஞைக்கல்
சொக்கச்சீயன் கல்
ஆடவல்லான் குடிஞைக்கல்
அருமொழித் தேவநாழி
அரியென்ன வல்லா நாழி
உலகளந்தான் நாழி
தேவாசிரியன் நாழி
சோழிய நாழி
குரண நாழி

******




<u>அட்டைப்படம் :</u>

முன் பக்கம் : தஞ்சைப் பெருவுடையார் கோயிலிலுள்ள இராசராசன் கல்வெட்டு

பின் பக்கம் : நடனமங்கையர் - ஓவியம்

